ஸ்ரீ



ஸ்ரீமதே ராமாநுஜாய நம :

# ஸ்வாமி நம்மாழ்வார் (இந்தியா) அறக்கட்டளை,

(Regd & Admin Office 53 6 சௌந்தர்யா காலனி, அண்ணாநகர் மேற்கு, சென்னை 600 101 Ph 2615 1988)

ஸ்ரீ :



ஸ்ரீமதே ராமானுஜாய நம :

# திவ்ய ப்ரபந்த வித்வத் ஸபை

(Unit : ஸ்வாமி நம்மாழ்வார் (இந்தியா) அறக்கட்டளை)

## ஸ்ரீவைஷ்ணவ பாடத்தொடர் கல்வி நிறுவனம்

(ஆழ்வார்கள், ஆசார்யர்கள், அவதாரங்கள்,
அருளிச் செயல் பற்றிய வினாவிடைகள்)

# வினா விடை வங்கி-2008

(3rd Edition)

**ஸ்வாமி நம்மாழ்வார் (இந்தியா) அறக்கட்டளை**

Regd. & Admn. Off. :
53/6, Soundaraya Colony, Anna Nagar West Extn.,
Chennai - 600 101 Phone : 26151988

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமானுஜாய நம :



## திருமலை—திருப்பதி தேவஸ்தானம்

## பெரியகேள்விஅப்பன் ஜீயர்மடம், திருமலை

# மங்களாஸாஸன ஸ்ரீமுகம்

சென்னை ஸ்வாமி நம்மாழ்வார் (இந்தியா) அறக்கட்டளை நிர்வாகிகளுக்கும், அங்கத்தினர்களுக்கும் அநேக மங்களாஸாஸனங்கள்.

இப்பவும் அறக்கட்டளையின் வெளியீடான ஸ்ரீவைஷ்ணவ வினா—விடைகள் என்கிற க்ரந்தத்தைப் பரிபூர்ணமாக வாஸித்து ஸந்தோஷித்தேன். இதன் அடிப்படையில் மாணவர்களுக்கு ஒரு பரீக்ஷை வைப்பது உன்னதமான விஷயமாகும். ஆழ்வார் ஆச்சார்யர்களின் வைபவங்கள் க்ரந்தங்கள், இதிஹாஸ புராணங்கள் ஆகியவற்றில் அடங்கியுள்ள விஷயங்களைப் பற்றி வினாக்களும் சுருக்கமான விடைகளும் மிக நுட்பமாக அமைக்கப்பட்டுள்ள முறை அழகியதாக உள்ளது. எளிய வழியில் ஸம்ப்ரதாய அடிப்படை ஜ்ஞானம் பெற விழைவோர்க்கு இது ஒரு சீரிய நூலாகும். சிறுவர்கள் மட்டுமின்றி ஸம்ப்ரதாயத்தில் அதிக பரிச்சயமற்றவர்களுக்கும் மிகவும் உபயோகப்படும் நூலாகும். மேலும், அண்மையில் மும்பையிலுள்ள அடியார்களிடமும் இந்த நூல் பிரசித்தமாக பரவியுள்ளதை நாம் நேரில் கண்டு ஸந்தோஷித்தோம்.

இதனை மற்ற மொழிகளிலும் மொழிபெயர்த்து வெளியிடலாம். இந்த அறக்கட்டளையின் இவ்வகையான கைங்கர்யங்கள் யாவும் மேன்மேலும் சிறந்து வளர்ந்து ஸம்ப்ரதாயம் வளர வேண்டும் என்று அலர்மேல் மங்கையுறை மார்பன் பூவார்கழல்களில் ப்ரார்த்திக்கிறேன்.

முன் பதிப்புகளில் வெளியிட்ட விஷயங்களை மேலும் ஒழுங்குபடுத்தி இதிஹாஸ புராணங்களிலுள்ள பகவத் அவதாரங்கள் மற்றும் திருவரங்கம் பற்றிய வினாவிடைகளையும், அருளிச்செயல்களையும் சேர்த்து இப்பதிப்பில் வெளியிட்டிருப்பது மஹோபகாரமும், சிறப்பும் ஆகும்.

வர்த்ததாம் அபிவர்த்ததாம்

श्री रामानुज :

சன்னதி தெரு, திருமலை — திருமலை திருப்பதி பெரியகோயில்கேள்வி அப்பன்

10.01.2008 — ஸ்ரீ ரங்கராமானுஜ ஜீயர் ஸ்வாமி

|| ஸ்ரீ : ||

ஸ்ரீமதே ராமானுஜாய நம :



ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி திருமலை திருப்பதி திருநின்றவூர் தர்மகர்த்தாவா:
பெரியகோயில்கேள்வியப்பன் ஸ்ரீ ஸ்ரீரங்க ராமானுஜ பெரிய ஜீயர் ஸ்வாமிக:

அம்பத்தூர் பார்த்தசாரதி

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமானுஜாய நம :



திருமலை–திருப்பதி தேவஸ்தானம்

பெரியகேள்விஅப்பன் ஜீயர்மடம், திருமலை

# மங்களாஸாஸன ஸ்ரீமுகம்

சென்னை ஸ்வாமி நம்மாழ்வார் (இந்தியா) அறக்கட்டளை நிர்வாகிகளுக்கும், அங்கத்தினர்களுக்கும் அநேக மங்களாஸாஸனங்கள்.

இப்பவும் அறக்கட்டளையின் வெளியீடான ஸ்ரீவைஷ்ணவ வினா–விடைகள் என்கிற க்ரந்தத்தைப் பரிபூர்ணமாக வாஸித்து ஸந்தோஷித்தேன். இதன் அடிப்படையில் மாணவர்களுக்கு ஒரு பரீக்ஷை வைப்பது உன்னதமான விஷயமாகும். ஆழ்வார் ஆச்சார்யர்களின் வைபவங்கள் க்ரந்தங்கள், இதிஹாஸ புராணங்கள் ஆகியவற்றில் அடங்கியுள்ள விஷயங்களைப் பற்றி வினாக்களும் சுருக்கமான விடைகளும் மிக நுட்பமாக அமைக்கப்பட்டுள்ள முறை அழகியதாக உள்ளது. எளிய வழியில் ஸம்ப்ரதாய அடிப்படை ஜ்ஞானம் பெற விழைவோர்க்கு இது ஒரு சீரிய நூலாகும். சிறுவர்கள் மட்டுமின்றி ஸம்ப்ரதாயத்தில் அதிக பரிச்சயமற்றவர்களுக்கும் மிகவும் உபயோகப்படும் நூலாகும். மேலும், அண்மையில் மும்பையிலுள்ள அடியார்களிடமும் இந்த நூல் பிரசித்தமாக பரவியுள்ளதை நாம் நேரில் கண்டு ஸந்தோஷித்தோம்.

இதனை மற்ற மொழிகளிலும் மொழிபெயர்த்து வெளியிடலாம். இந்த அறக்கட்டளையின் இவ்வகையான கைங்கர்யங்கள் யாவும் மேன்மேலும் சிறந்து வளர்ந்து ஸம்ப்ரதாயம் வளர வேண்டும் என்று அலர்மேல் மங்கையுறை மார்பன் பூவார்கழல்களில் ப்ரார்த்திக்கிறேன்.

முன் பதிப்புகளில் வெளியிட்ட விஷயங்களை மேலும் ஒழுங்குபடுத்தி இதிஹாஸ புராணங்களிலுள்ள பகவத் அவதாரங்கள் மற்றும் திருவரங்கம் பற்றிய வினாவிடைகளையும், அருளிச்செயல்களையும் சேர்த்து இப்பதிப்பில் வெளியிட்டிருப்பது மஹோபகாரமும், சிறப்பும் ஆகும்.

**வர்த்ததாம் அபிவர்த்ததாம்**

श्री रामानुज :

*சன்னதி தெரு, திருமலை* — *திருமலை திருப்பதி பெரியகோயில்கேள்வி அப்பன்*

10.01.2008 — *ஸ்ரீ ரங்கராமானுஜ ஜீயர் ஸ்வாமி*

|| श्री : ||

ஸ்ரீ ரங்கநாத திவ்யமணி பாதுகாப்யாம் நம :



ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீரங்கம் ஸ்ரீமதாண்டவன்
ஸ்ரீரங்கராமானுஜ மஹாதேசிகன் (ஸ்ரீமுஷ்ணம்)



Srimathe Rangaramanuja Mahadesikaya Namaha
Srimathe Srinivasa Ramanuja Mahadesikaya Namaha
Srimathe Vedantha Ramanuja Mahadesikaya Namaha
Srimathe Ranganatha Mahadesikaya Namaha

Srimathe Srinivasa Mahadesikaya Namaha
Srimathe Nigamantha Mahadesikaya Namaha
Srimathe Bhaghawathe Bashyakaraya Mahadesikaya Namaha
Srimathe Ranganatha Divyamani Padukabyam Namaha


**SRIRANGAM**
**SRIMAD ANDAVAN ASHRAMAM**

H.Qrs. Melur Road, Srirangam, Tiruchirappalli - 620 006
Phone : 0431 - 2-432379


தேதி
Date : 19.03.2004.

நம் ஸம்ப்ரதாயத்தைச் சேர்ந்த சிஷ்யர்கள் உள்ளத்தில் ஸம்ப்ரதாயம் பற்றிய ஆர்வமும் அறிந்து கொள்ளும் ஆவலும் அதிகரித்து வரும் நிலை உருவாகி வருவதைக் கண்டு பெரியவர்கள் ஸந்தோஷப்படும் நிலை ஏற்பட்டுள்ளது. இந்த ஸந்தர்ப்பத்தை நல்ல முறையில் பயன்படுத்திக் கொண்டு "ஸ்வாமி நம்மாழ்வார் (இந்தியா) அறக்கட்டளை" பல முறைகளில் பல பணிகளைச் செய்து வருவதைக் கண்டு ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீமத் ஆண்டவன் திருவுள்ளம் உகந்து அனுக்ரஹிக்கிறது.

இந்த அறக்கட்டளையின் எல்லா நிகழ்ச்சிகளும் மிகவும் பாராட்டத்தக்க முறையில் அமைந்துள்ளன. குறிப்பாக இவ்வறக்கட்டளை வெளியிட்டுள்ள வினா விடை நூல் மிகவும் பயனுள்ளதாக அமைந்துள்ளது. இதன் வாயிலாக நம் ஸம்ப்ரதாயம் பற்றிய பல விஷயங்களை அறிந்து கொள்ள வாய்ப்புள்ளது. பல ஸௌகர்யமான இந்த முறையான இந்த கைங்கர்யத்தில் ஈடுபட்டுள்ள இவ்வறக்கட்டளையின் பணிகள் மேலும் சிறக்கவும் இந்த கைங்கர்யத்தில் பங்கேற்கும் அன்பர்களுக்கும் கைங்கர்யத்தில் சிறப்பும் ஸமஸ்த மங்களங்களும் அடையவும் ஸ்ரீரங்க திவ்ய தம்பதிகளையும் பூர்வாசார்ய பாதுகைகளையும் ப்ரார்த்தித்து ஸ்ரீமதாண்டவன் அனுக்ரஹிக்கிறது.

ஸ்ரீமத் ஆண்டவன் நியமனப்படி
கே. கோவிந்தராகவன்
ஸ்ரீகார்யம்

ஸ்ரீ :

ஸ்ரீமதே ராமானுஜாய நம:

# முன்னுரை

ஸ்வாமி நம்மாழ்வார் (இந்தியா) அறக்கட்டளையின் சார்பில் ஆழ்வார்கள், ஆசாரியர்கள் அருளிச்செயல், விபவதாரங்கள், திருவரங்கம் ஆகியவை பற்றிய வினா விடைகளடங்கிய இந்நூலினை (3rd Edition) மாணவ, மாணவியருக்காக வெளியிடும் தொண்டினைச் செய்வதில் பெருமகிழ்ச்சியடைகிறோம்.

இந்நூல் வெளியிடுவதற்கு உறுதுணையாக இருந்து பலவிதத்திலும் உதவிய பாகவதர்களுக்கும், வித்வான்களுக்கும் அடியோங்களது க்ருதஜ்ஞதையை ஸமர்ப்பித்துக் கொள்கிறோம்.

இந்நூலை கடாக்ஷித்து மங்களாசாஸன ஸ்ரீமுகம் சாதித்தருளின திருமலை திருப்பதி பெரியகோயில் கேள்வி அப்பன் ஸ்ரீ ரங்கராமானுஜ ஜீயர் ஸ்வாமி திருவடி தாமரைகளிலும், ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீரங்கம் ஸ்ரீமதாண்டவன் ஸ்ரீரங்கராமானுஜ மஹாதேசிகன் (ஸ்ரீமுஷ்ணம்) ஸ்வாமி திருவடித் தாமரைகளிலும் அடியோங்களது க்ருதஜ்ஞதையை ஸமர்ப்பித்துக் கொள்கிறோம். மேலும் இந்நூலினை நல்ல முறையில் அச்சிட்டு வெளி வர உதவிய ஸ்ரீபாலகணபதி பிரிண்டர்ஸ், காஞ்சிபுரம் மற்றும் அனைவருக்கும் எங்களுடைய மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

ஆழ்வார், எம்பெருமானார், ஜீயர் திருவடிகளே சரணம்

**பொலிக! பொலிக!! பொலிக!!!**

சென்னை
14.01.2008

**K E B. *வரதாச்சாரி***
**Chairman & Managing Trustee**
**ஸ்வாமி நம்மாழ்வார் (இந்தியா) அறக்கட்டளை**

ஸ்ரீ

# பொருளடக்கம்



*****

ஸ்ரீ

# ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## I

1. முதலாழ்வார்கள் எனப்படுபவர் யாவர் ?

   *பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார்.*

2. பொய்கையாழ்வார் அவதரித்த ஸ்தலம் எது ?

   *காஞ்சிபுரம், திருவெஃகா.*

3. பொய்கையாழ்வார் எதிலிருந்து அவதரித்தார் ?

   *தாமரைப் பொய்கையில் தாமரை மலரிலிருந்து அவதரித்தார்.*

4. பொய்கையாழ்வார் அவதரித்த மாதம் நக்ஷத்திரம் எது ?

   *ஐப்பசி மாதம், திருவோண நக்ஷத்திரம்.*

5. பொய்கையாழ்வார் இயற்றிய பிரபந்தம் எது ?

   *முதல் திருவந்தாதி.*

6. முதல் திருவந்தாதியில் எத்தனை பாசுரங்கள் உள்ளன ?

   *100.*

7. முதல் திருவந்தாதியில் முதல் பாசுரத்திலுள்ள முதல் வார்த்தை எது ?

   *வையம்.*

8. திருக்கடல் மல்லையில் அவதாரம் செய்தவர் யார் ?

   *பூதத்தாழ்வார்.*

9. பூதத்தாழ்வார் எந்த மாதம் எந்த நக்ஷத்திரத்தில் அவதரித்தார் ?

   *ஐப்பசி மாதம் அவிட்ட நக்ஷத்திரம்.*

10. பூதத்தாழ்வார் எதிலிருந்து அவதரித்தார் ?

    *பூப்பந்தலில் நீலோத்பல மலரில் அவதரித்தார்.*

11. பூதத்தாழ்வார் இயற்றிய பிரபந்தம் எது ?

    *இரண்டாம் திருவந்தாதி.*

12. இரண்டாம் திருவந்தாதியில் எத்தனை பாசுரங்கள் உள்ளன ?

    *100.*

13. இரண்டாம் திருவந்தாதியில் முதற்பாசுரத்திலுள்ள முதல் வார்த்தை எது ?

*அன்பே.*

14. பேயாழ்வார் அவதரித்த ஸ்தலம் எது ?

*திருமயிலை.*

15. பேயாழ்வார் எதிலிருந்து அவதரித்தார் ?

*கிணற்றில் செவ்வல்லிப் பூவிலிருந்து அவதரித்தார்.*

16. பேயாழ்வார் அவதரித்த மாதம், நக்ஷத்திரம் எது ?

*ஐப்பசி மாதம் சதய நக்ஷத்திரம்.*

17. பேயாழ்வார் இயற்றிய பிரபந்தம் எது ?

*மூன்றாம் திருவந்தாதி.*

18. மூன்றாம் திருவந்தாதியில் எத்தனை பாசுரங்கள் உள்ளன ?

*100.*

19. மூன்றாம் திருவந்தியில் முதற்பாசுரத்திலுள்ள முதல் வார்த்தை எது ?

*திரு*

20. முதலாழ்வார்கள் ஒன்றாகக் கூடிய ஸ்தலம் யாது ?

*திருக்கோவலூர்.*

21. திருக்கோவலூர் பெருமாள் பெயர் என்ன ?

*தேஹளீசன்.*

22. வார்கடலே நெய்யாகவும், ஆர்வமே நெய்யாகவும் விளக்கேற்றியவர்கள் யாவர் ?

*பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார்.*

23. அவ்வொளியில் சங்கு சக்கரத்துடன் திருமாலை காணப்பெற்றவர் யார் ?

*பேயாழ்வார்.*

24. பேயாழ்வார் யாரைத் திருத்தித் திருமாலடியாராக்கினார் ?

*திருமழிசையாழ்வாரைத் திருத்தித் திருமாலடியாராக்கினார்.*

## II

25. திருமழிசையாழ்வார் அவதரித்த ஸ்தலம் எது ?

*திருமழிசை.*

26. பார்க்கவ முனிவர் திருமாலைக்குறித்து, "தீர்க்க சத்திர யாகம்" செய்த ஸ்தலம் யாது ?

*திருமழிசை.*

27. திருமழிசையாழ்வாரை எந்த இடத்தில் யார் கண்டெடுத்து வளர்த்தார்கள் ?

*பிரம்புப்புதரில் திருவாளன் என்னும் பிரம்பறுப்பாளர் கண்டெடுத்து வளர்த்தார்.*

28. திருமழிசையாழ்வார் அவதரித்த மாதம் நக்ஷத்திரம் எது ?

*தைமாதம் மகம் நக்ஷத்திரம்.*

29. திருமழிசையாழ்வார் இயற்றிய பிரபந்தங்கள் எவை ?

*திருச்சந்தவிருத்தம், நான்முகன் திருவந்தாதி.*

30. திருச்சந்தவிருத்தத்தில் எத்தனை பாசுரங்கள் உள்ளன ?

*120.*

31. நான்முகன் திருவந்தாதியில் எத்தனை பாசுரங்கள் உள்ளன ?

*96.*

32. நான்முகன் திருவந்தாதியின் முதல் பாசுரத்தின் முதல் வார்த்தை எது ?

*நான்முகன்.*

33. திருச்சந்தவிருத்தத்தின் முதல் பாசுரத்தின் முதல் வார்த்தை எது ?

*பூ.*

34. திருமழிசையாழ்வாரின் சீடர் பெயர் என்ன ?

*கணிகண்ணன்.*

35. திருமழிசையாழ்வார் கேட்டதன் பேரில் அவருடன் புறப்பட்டுச் சென்ற எம்பெருமான் யார் ? அவரது வடமொழிப் பெயரென்ன ?

*திருவெஃகாவில் எழுந்தருளியிருக்கும், சொன்ன வண்ணம் செய்த பெருமாள்; அவரது வடமொழிப்பெயர் யதோக்தகாரி.*

36. திருமழிசையாழ்வார் கேட்டுக் கொண்டதன் பேரில் எழுந்து பேச முற்பட்டவர் யார் ? அவரது மற்றொரு பெயரென்ன ?

*திருக்குடந்தையில் எழுந்தருளியிருக்கும் ஆராவமுதன். அவரது மற்றொரு பெயர் சார்ங்கபாணி என்பதாகும்.*

37. திருமழிசையாழ்வார் முதலாழ்வார்களை எங்கே சந்தித்தார் ? பின்னர் நால்வரும் எங்கு ஒன்றாகத் தங்கியிருந்தனர் ?

*மலைக்குகை ஒன்றில் தவம் செய்து கொண்டிருந்த போது சந்தித்தார்.பின்னர் திருவல்லிக்கேணித் திருத்தலத்திலுள்ள திருக்குளக்கரையில் தங்கியிருந்தனர்.*

## III

38. நம்மாழ்வார் எப்பொழுது அவதரித்தார் ?

*கலியுகம் தொடங்கி 43 வது நாள்.*

39. நம்மாழ்வார் அவதரித்த ஊர் எது ?

*திருக்குருகூர் எனும் ஆழ்வார் திருநகரி.*

40. ஆதிசேஷன் எந்த ஊரில் புளியமரமாக ஸேவை ஸாதிக்கிறான் ?

*ஆழ்வார் திருநகரி.*

41. திருக்குருகூரின் மறுபெயர் என்ன ?

*ஆழ்வார்திருநகரி.*

42. நம்மாழ்வார் அவதரித்த மாதம், நக்ஷத்திரம் எது ?

*வைகாசி மாதம் விசாக நக்ஷத்திரம்.*

43. நம்மாழ்வாரின் அர்ச்சைத்திருமேனி எந்த நாளில் பிரதிஷ்டை செய்யப்பட்டது ?

*மாசி விசாக நன்னாளில்.*

44. நம்மாழ்வாரின் தந்தை பெயர் என்ன ?

*காரியார்.*

45. நம்மாழ்வாரின் தாயார் பெயர் என்ன ?

*உடைய நங்கையார்.*

46. நம்மாழ்வாரின் தாய்தந்தையருக்கு கோயில் அமைந்த இடம் எது ?

*அப்பன் கோயில்.*

47. நம்மாழ்வாரின் தாயார் ஊர் எது ?

*திருவண்பரிசாரம்.*

48. * காரியாரின் தந்தை பெயர் யாது ?

*பொற்காரியார்.*

49. கிருஷ்ணத்ருஷ்ணாதத்வம் என்று அழைக்கப்படுபவர் யார் ?

*நம்மாழ்வார்.*

50. அனவரதம் சேனையர் கோன் அடிதொழுபவர் யார் ?

*நம்மாழ்வார்.*

51. நம்மாழ்வாரின் பிற திருப்பெயர்கள் எவை ?

*சடகோபன், மாறன், காரிமாறன், வழுதிவளநாடன், குருகூர்மன்னன், குருகைக்கோன், பராங்குசன், பெரியன், வகுளாபரணன் என்பனவாகும்.*

52. நம்மாழ்வார் எந்தெந்த திவ்ய தேசங்களுக்குச் சென்று மங்களா சாசனம் செய்தார் ?

*நம்மாழ்வார் எந்த திவ்ய தேசத்துக்கும் செல்லவில்லை.*

53. நவதிருப்பதிகளை மங்களாசாசனம் செய்த ஆழ்வார் யார் ?

*நம்மாழ்வார் மட்டுமே நவதிருப்பதிகளை மங்களாசாசனம் செய்துள்ளார்.*

54. ஆழ்வார் என்றாலே பொதுவாக யாரைக் குறிக்கும் ?

*நம்மாழ்வாரைக் குறிக்கும்.*

55. வகுளாபரணன் என்று அழைக்கப்படும் ஆழ்வார் யார் ?

*நம்மாழ்வார்.*

56. நம்மாழ்வார் ஏன் சடகோபன் என்று அழைக்கப்படுகிறார் ?

*பிறந்தவுடன் அறியாமையை உண்டாக்கும் சடவாயு தம்மை அண்டவிடாமல் அதனைக் கோபித்ததால் சடகோபர் என்று அழைக்கப்படுகிறார்.*

57. நம்மாழ்வார் ஏன் மாறன் என்று அழைக்கப்படுகிறார் ?

*பிறந்தவுடன் அழாமல், பால் குடிக்காமல் உலக நடைமுறைக்கு மாறுபட்டு இருந்ததால் மாறன் என்று அழைக்கப்படுகிறார்.*

58. வேதம் தமிழ் செய்த மெய்யன் யார் ?

*நம்மாழ்வார்.*

59. நம்மாழ்வார் எந்த திவ்யதேசத்தின் எம்பெருமானின் அம்சமாகவும் கருதப்படுகிறார் ?

*திருக்குறுங்குடியில் எழுந்தருளியிருக்கும் நம்பியின் அம்சம்.*

60. நம்மாழ்வார் இயற்றிய பிரபந்தங்கள் எவை ?

*திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி.*

61. வேதங்களுக்குச் சமமாக யாருடைய பிரபந்தங்கள் கருதப்படுகின்றன ?

*நம்மாழ்வாருடைய நான்கு பிரபந்தங்கள்.*

62. திருவிருத்தத்தில் எத்தனை பாசுரங்கள் உள்ளன ?

*நூறு பாசுரங்கள்.*

63. அதில் முதல் பாசுரத்தின் முதல் வார்த்தை என்ன ?

*பொய்.*

64. திருவாசிரியத்தில் எத்தனை பாடல்கள் உள்ளன ?

*ஏழு.*

65. அதில் முதல் பாசுரத்திலுள்ள முதல் வார்த்தை எது ?

*செக்கர்.*

66. பெரியதிருவந்தாதியில் எத்தனை பாசுரங்கள் உள்ளன ?

*87 பாசுரங்கள்.*

67. அதில் முதல் பாசுரத்தின் முதல் வார்த்தை என்ன ?

*முயற்றி.*

68. திருவாய்மொழியில் எத்தனை பாசுரங்கள் உள்ளன ?

*1102 பாசுரங்கள்.*

69. திருவாய்மொழியின் "ஈன்ற முதல் தாய்" யார் ?

*நம்மாழ்வார்.*

70. திருவாய்மொழியின் "வளர்த்த இதத் தாய்" யார் ?

*இராமானுஜர்.*

71. நம்மாழ்வாரின் எப்பாசுரம் சங்கப்பலகையில் ஏறி வென்றது ?

*"கண்ணன் கழலிணை" என்னும் பாசுரம்.*

72. திருவாய்மொழியில் எத்தனை பதிகங்கள் உள்ளன ? அதில் முதல் பாசுரத்தின் முதல் வார்த்தை என்ன ?

*நூறு பதிகங்கள், உயர்வற.*

73. திருவாய்மொழிக்கு எத்தனை ஆசார்யர்கள் வியாக்கியானம் செய்துள்ளனர் ? அவர்கள் யாவர் ?

*ஐவர்; திருக்குருகைப்பிரான் பிள்ளான், நஞ்சீயர், பெரியவாச்சான் பிள்ளை, நம்பிள்ளை, வாதிகேசரி அழகிய மணவாள ஜீயர்.*

74. திருவாய்மொழி எந்த வேதத்திற்கு சமமாகிறது ?

*ஸாமவேதம் (சாந்தோக்ய உபநிஷத்)*

75. குன்றமெடுத்த பிரான் அடியாரோடு ஒன்றி நின்றவர் யார் ?

*சடகோபன்.*

76. நம்மாழ்வாரைப் புகழ்ந்து பாடிய தமிழ்ப்புலவர்கள் யாவர் ?

*திருவள்ளுவர், ஒளவையார், இடைக்காடர், கம்பர், இடைச்சங்கப்புலவர்கள்.*

77. நம்மாழ்வார் விஷயமான தமிழ்ப் பிரபந்தங்கள் எவை ?

*கண்ணிநுண் சிறுத்தாம்பு, சடகோபரந்தாதி, மாறனலங்காரம்.*

78. நம்மாழ்வார் விஷயமான வடமொழி ஸ்தோத்திரங்கள் எவை ?

*பராங்குசாஷ்டகம், பராங்குச பஞ்சவிம்சதி, பராங்குச நக்ஷத்ர மாலிகா.*

79. ஞானமுத்திரையைத் தம்முடைய ஹிருதயத்தை நோக்கி வைத்துக் கொண்டு சேவைசாதிக்கும் நம்மாழ்வார் எந்த திவ்ய தேசத்தில் எழுந்தருளி உள்ளார் ?

*காஞ்சீபுரத்தில் வரதராஜப் பெருமாள் சன்னிதியில்.*

80. நம்மாழ்வார் எந்த நிலையில் எம்பெருமான் திருமுன்பு சேவை சாதிக்கிறார் ?

*திருவடி நிலையாக சேவை சாதிக்கிறார். அதனால் திருவடி நிலைக்கு ஸ்ரீசடாரி என்றும் ஸ்ரீசடகோபன் என்றும் திருநாமமாயிற்று.*

81. எந்த திவ்ய தேசத்திலுள்ள திருவடிநிலையில் (ஸ்ரீசடாரியில்) நம்மாழ்வார் திருவுருவத்துடன் சேவை சாதிக்கிறார் ?

*வானமாமலையிலுள்ள தெய்வநாயகனின் திருவடி நிலையில்.*

82. எந்த திவ்ய தேசத்திலுள்ள ஸ்ரீசடாரி ஆதிசேஷன் வடிவில் சேவை சாதிக்கிறார் ?

*சோளஸிஂஹபுரத்திலுள்ள தக்கானின் ஸ்ரீசடாரியில் ஆதிசேஷனாக சேவை சாதிக்கின்றார்.*

83. நம்மாழ்வார் எத்தனை ஆண்டுக்காலம் இவ்வுலகில் எழுந்தருளியிருந்தார் ?

*35 ஆண்டுகள்.*

84. ஸ்வாமி நம்மாழ்வாரின் முதல் சீடர் யார் ?

*மதுரகவிகள்.*

85. மதுரகவியாழ்வார் அவதரித்த ஸ்தலம் எது ?

*திருக்கோளூர்.*

86. மதுரகவியாழ்வார் எந்த மாதம் எந்த நாளில் பிறந்தார் ?

*சித்திரை மாதம் சித்திரை நக்ஷத்திரம்.*

87. மதுரகவியாழ்வாரின் ஆசார்யர் யார் ?

*நம்மாழ்வார்.*

88. ஆசார்யனே ஸர்வமும் என்று ஆசார்யனை வணங்கிய ஆழ்வார் யார் ?

*மதுரகவியாழ்வார்.*

89. மதுரகவியாழ்வார் இயற்றிய பிரபந்தத்தின் பெயர் என்ன ?

*கண்ணிநுண் சிறுத்தாம்பு.*

90. திருமந்திரத்தின் மத்திய பதம் போலே அருளிச்செயல் நடுவே உள்ள பிரபந்தம் எது ?

*கண்ணிநுண் சிறுத்தாம்பு.*

91. கண்ணிநுண் சிறுத்தாம்பில் எத்தனை பாசுரங்கள் உள்ளன ?

*பதினொன்று.*

92. மதுரகவியாழ்வார் நம்மாழ்வாரிடம் கேட்ட கேள்வி என்ன ?

*"செத்ததின் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்" ?*

93. அதற்கு நம்மாழ்வாரின் பதில் என்ன ?

*'அத்தைத் தின்று அங்கே கிடக்கும்'.*

## IV

94. பெருமாள் என்கிற அடைமொழி உடைய ஆழ்வார் யார் ?

*குலசேகர ஆழ்வார்.*

95. குலசேகர ஆழ்வார் அவதரித்த இடம் எது ?

*திருவஞ்சிக்களம்.*

96. குலசேகராழ்வார் அவதரித்த மாதம், நக்ஷத்திரம் எது ?

*மாசி மாதம் புனர் வஸு நக்ஷத்திரம்.*

97. குலசேகராழ்வார் இயற்றிய பிரபந்தம் யாது ?

*பெருமாள் திருமொழி.*

98. பெருமாள் திருமொழியில் எத்தனை பாசுரங்கள் உள்ளன ?

*105.*

99. பெருமாள் திருமொழியில் எத்தனை பதிகங்கள் உள்ளன ?

*பத்துப் பதிகங்கள்.*

100. பெருமாள் திருமொழியில் முதல் பாசுரத்தில் உள்ள முதல் வார்த்தை எது ?

*இருளிரிய.*

101. குலசேகராழ்வாரின் பிற திருநாமங்கள் யாவை ?

*கொல்லி காவலன், கூடல் நாயகன், கோழியர் கோன்.*

102. குலசேகராழ்வாரின் திருக்குமாரர் பெயர் என்ன ?

*த்ருடவ்ரதர்.* (as per *பன்னீராயிரப்படி குருபரம்பரை*)

103. குலசேகராழ்வாரின் பெண்ணின் பெயர் என்ன ? அவள் யாரை மணந்தாள் ? அவள் எங்கு எழுந்தருளியிருக்கிறாள் ?

*இளை என்கிற சேரகுலவல்லி. அவள் ஸ்ரீரங்கநாதனை மணந்தாள். ஸ்ரீரங்கநாதனின் திருவடிக்கு நேரேயுள்ள அர்ஜுன மண்டபத்தினுள்ளே தனி ஸந்நிதியில் எழுந்தருளியிருக்கிறாள்.*

104. குலசேகராழ்வாரின் பெயரில் எந்த இடங்கள் ஸ்ரீரங்கம் மற்றும் திருமலையில் வழங்கப்படுகின்றன ?

*ஸ்ரீரங்கத்தில் மூன்றாவது ப்ராகாரம் குலசேகரன் வீதி என்று வழங்கப்படுகிறது. திருமலையில் திருவேங்கடமுடையான் திருமுன்பே உள்ள படிக்கட்டு குலசேகரன்படி என்று வழங்கப்படுகிறது.*

105. குலசேகராழ்வார் ஸ்ரீவைஷ்ணவர்களுக்காகச் செய்த காரியம் எது ?

ஸ்ரீவைஷ்ணவர்கள் மீது திருட்டுக் குற்றம் சாட்டப் பட்டபொழுது அவர்கள் திருடியிருக்க மாட்டார்கள் என்று பாம்பு உள்ள குடத்தில் கையை விட்டு சத்தியம் செய்ய, பாம்பு தீண்டாமலிருந்தது.

106. தினமும் ஸ்ரீரங்கயாத்திரை செல்ல விரும்பிய ஆழ்வார் யார் ?

குலசேகரப்பெருமாள்.

107. அவர் எத்தனை ஆண்டுகாலம் இவ்வுலகில் எழுந்தருளியிருந்தார் ?

67 ஆண்டுகள்.

108. குலசேகராழ்வார் திருநாடலங்கரித்த இடம் எது ?

திருக்குருகூருக்கு அருகிலுள்ள பிரம்மதேசம் என்கிற மன்னார் கோவில்.

## V

109. பெரியாழ்வாரின் இயற்பெயர் யாது ?

விட்டுசித்தர்.

110. பெரியாழ்வார் அவதரித்த ஸ்தலம் யாது ?

ஸ்ரீவில்லிபுத்தூர்.

111. பெரியாழ்வாரின் திருநக்ஷத்திரம் யாது ? அவர் எம்மாதத்தில் அவதரித்தார் ?

ஆனியில் சுவாதி நட்சத்திரம்.

112. பெரியாழ்வார் பெண் பிள்ளையின் பெயர் என்ன ?

ஆண்டாள்.

113. பெரியாழ்வார் என்ன கைங்கர்யம் செய்தார் ?

ஸ்ரீவடபத்ர சாயிக்குப் பூமாலைகளை அணிவித்தார்.

114. பெரியாழ்வாரின் பிரபந்தங்கள் யாவை ?

திருப்பல்லாண்டு, பெரியாழ்வார் திருமொழி.

115. பெரியாழ்வாரின் எந்தப் பாசுரங்கள் நித்தியானுஸந்தானத்தில் உள்ளன ?

நீராட்டம், பூச்சூடல், காப்பிடல், சென்னியோங்கு.

116. திருப்பல்லாண்டில் எத்தனை பாசுரங்கள் உள்ளன ?

*12 பாசுரங்கள்.*

117. திருப்பல்லாண்டின் முதல் பாசுரத்திலுள்ள முதல் வார்த்தை எது ?

*பல்லாண்டு.*

118. வேதம் ஓதும்போது 'ஓம்' முதலில் வருவது போல் அருளிச்செயல் ஓதும்போது முதலில் வருவது எது ?

*திருப்பல்லாண்டு.*

119. திருப்பல்லாண்டின் முதல் பாசுரத்தில் யாருக்குப் பல்லாண்டு பாடப்படுகிறது ?

*மணிவண்ணனான திருமாலுக்குப் பல்லாண்டு பாடப்படுகிறது.*

120. திருப்பல்லாண்டின் இரண்டாம் பாசுரத்தில் மங்களாசாசனம் செய்யப்படுபவர்கள் யாவர் ?

*அடியார்கள், திருமால், திருமகள், திருஆழி, திருச்சங்கு.*

121. பெரியாழ்வார் திருமொழியில் எத்தனை பாசுரங்கள் உள்ளன ?

*461 பாசுரங்கள் உள்ளன.*

122. பெரியாழ்வார் திருமொழியில் முதற்பாசுரத்திலுள்ள முதல் வார்த்தை எது ?

*வண்ணமாடங்கள்.*

123. கிருஷ்ணாவதார குணங்களைப் பெரியாழ்வாரின் எந்த நூல் விவரிக்கிறது ?

*பெரியாழ்வார் திருமொழி.*

124. எந்தப் பெருமாள் பெரியாழ்வார் கனவில் தோன்றினார் ?

*ஸ்ரீவில்லிப்புத்தூரில் உறையும் வடபத்திரசாயி.*

125. பெரியாழ்வார் எந்த அரச சபையில் தத்துவநிர்ணயம் செய்தார் ?

*ஸ்ரீவல்லபதேவன் என்கிற பாண்டிய அரசன் சபை.*

126. பெரியாழ்வாருக்குச் சூட்டப்பட்ட விருதுப்பெயர் யாது ?

*பட்டர்பிரான்.*

127. பொற்கிழியைப் பெற்ற பின் பெரியாழ்வாருக்கு எம்பெருமான் எப்படி சேவை சாதித்தான் ?

*சங்கு சக்கரமேந்தி ஸ்ரீதேவி பூமிதேவியுடன் கருடன் மேல் சேவை சாதித்தான்.*

128. பொங்கும் பரிவாலே வில்லிப்புத்தூர் பட்டர்பிரான் பெற்றான் பெரியாழ்வார் என்னும் பெயர் ------------------ இவ்வாறு அருளிச் செய்தவர் யார் ?

*மணவாள மாமுனிகள்.*

129. பெரியாழ்வார் திருமொழிக்கு உரை அருளிச் செய்தவர்கள் யாவர் ?

*முதல் நானூறு பாசுரங்களுக்குப் பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்த உரை கிடைக்காமற்போகவே மணவாளமாமுனிகள் அவற்றிற்கு உரை எழுதியருளினார். மற்ற 61 பாட்டுக்களுக்குப் பெரியவாச்சான்பிள்ளை உரை உள்ளது. திருவாய்மொழிப் பிள்ளையும் உள்ளுறைப் பொருள் வழங்கியதாகக் கூறப்படுகிறது.*

130. கண்ணனின் தொட்டிலைப் பெரியாழ்வார் எவ்வாறு வர்ணிக்கிறார் ?

*ஆணிப்பொன்னால் செய்த வண்ணச்சிறுத் தொட்டில் என்று வர்ணிக்கிறார்.*

131. சக்கரக்கையன் யார் ?

*பெருமாள்.*

132. சங்கொடுசக்கரம் சாா்ங்கமேந்தும் தடக்கையன் யார் ?

*ஸ்ரீமன் நாராயணன்.*

133. பாலகனென்று பரிபவம் செய்யேல்! என்று தொடங்கும் பாடலில் பண்டொருநாள் கண்ணன் செய்ததாகப் பெரியாழ்வார் எதைக்கூறுகிறார் ?

*ஆலினிலை வளர்ந்த சிறுக்கனவன் இவன் என்று பெரியாழ்வார் கூறுகின்றார்.*

134. சிறியனென்று என்னிளஞ்சிங்கத்தை இகழேல் கண்டாய்! சிறுமையின் வார்த்தையை யாரிடம் சென்று கேட்க வேண்டும் என்று பெரியாழ்வார் குறிப்பிடுகிறார் ?

*மாவலியிடம்.*

135. தாழியில் வெண்ணெய் தடங்கையார விழுங்கியது யார் ?

*கண்ணன்.*

136. மைத்தடங்கண்ணி யசோதை தன் மகன் யார் ?

*(நாராயணன்) கண்ணன்.*

137. நான்மறையின் பொருள் யார் ?

*நாராயணன். நம்முடைய நாயகன், உலகளந்த பெருமாள், கண்ணன்*

138. முன்னையமரர் முதல் தனிவித்து யார் ?

*நாராயணன்.*

139. பேயின் முலையுண்ட பிள்ளை யார் ?

*கண்ணன்.*

140. பெருமாள் எதன்மேல் இருப்பதாக பெரியாழ்வார் கூறுகிறார்.

*ஆலத்திலையான், அரவினணைமேலான்.*

141. கண்கள் கருவுடைமேகங்களை கண்டால் யாரைக்காண்பது போல் உள்ளதாகப் பெரியாழ்வார் கூறுகிறார் ?

*திருவரங்கத்தம்மானை.*

142. பெரியாழ்வாருக்கும் சமுத்திர ராஜனுக்குமுள்ள ஒற்றுமை என்ன ?

*இருவரும் எம்பெருமானின் மாமனார் ஆகின்றனர்.*

143. பெரியாழ்வார் திருநாடலங்கரித்தது எவ்விடத்தில் ?

*திருமாலிருஞ்சோலை மலையில்.*

## VI

144. தொண்டரடிப் பொடியாழ்வார் அவதரித்த திருத்தலம் யாது ?

*திருமண்டங்குடி.*

145. தொண்டரடிப்பொடியாழ்வாரின் அவதார மாதம் நக்ஷத்திரம் எது ?

*மார்கழியில் கேட்டை.*

146. தொண்டரடிப்பொடியாழ்வாரின் இயற்பெயர் யாது ?

*விப்ரநாராயணன்.*

147. தொண்டரடிப்பொடியாழ்வார் அருளிய பிரபந்தங்கள் யாவை ?

*திருமாலை, திருப்பள்ளியெழுச்சி.*

148. திருப்பள்ளி எழுச்சியில் எத்தனை பாசுரங்கள் உள்ளன ?

*10.*

149. திருப்பள்ளி எழுச்சியில் யாரைப் பள்ளி உணர்த்துகிறார் ?

*திருவரங்கநாதனை.*

150. திருப்பள்ளிஎழுச்சியில் முதல் பாசுரத்தின் முதல் வார்த்தை எது ?

*கதிரவன்.*

151. திருமாலையில் எத்தனை பாசுரங்கள் உள்ளன ?

45.

152. திருமாலையில் முதல்பாசுரத்தின் முதல் வார்த்தை எது ?

*காவல்.*

153. பெரியாழ்வாரைப் போன்று நந்தவனக் கைங்கர்யத்தில் ஈடுபட்ட மற்றோர் ஆழ்வார் யார் ?

*தொண்டரடிப்பொடியாழ்வார்.*

154. தொண்டரடிப்பொடியாழ்வார் எந்த திவ்யதேசத்தில் நந்தவனக் கைங்கர்யம் செய்தார் ?

*ஸ்ரீரங்கம்.*

155. தொண்டரடிப்பொடியாழ்வார் யாரிடத்தில் மயக்குற்றிருந்தார் ?

*தேவ தேவி என்கிற பெண்ணிடம்.*

156. தொண்டரடிப்பொடியாழ்வார் சேவை ஸாதிப்பது எவ்வாறு ?

*துளசிக்கூடையுடனும் தாமரை மணி மாலையுடனும் சேவை ஸாதிப்பார்.*

# VII

157. திருப்பாணாழ்வார் அவதரித்த ஸ்தலம் எது ?

*உறையூர்.*

158. திருப்பாணாழ்வார் அவதரித்த மாதம் நக்ஷத்திரம் எது ?

*கார்த்திகை மாதம், ரோஹிணி நக்ஷத்திரம்.*

159. லோகசாரங்க முனிவரின் தோளில் எழுந்தருளித் திருவரங்கக் கோயில் கருவறைக்குச் சென்றவர் யார் ?

*திருப்பாணாழ்வார்.*

160. திருப்பாணாழ்வார் இயற்றிய பிரபந்தம் எது ?

*அமலனாதிபிரான்.*

161. அமலனாதிபிரான் எத்தனை பாசுரங்கள் கொண்டது ?

*பத்து.*

162. அமலனாதிபிரானில் முதல் பாசுரத்தின் முதல் வார்த்தை எது ?

*அமலன்.*

163. திருப்பாணாழ்வார் நாள்தோறும் எங்கிருந்து குணகீர்த்தனம் பண்ணினார் ?

*காவிரிக்கரையிலிருந்து.*

## VIII

164. திருமங்கையாழ்வார் எந்த ஸ்தலத்தில் அவதரித்தார் ?

*திருக்குறையலூர்.*

165. திருமங்கையாழ்வார் அவதரித்த மாதம் நக்ஷத்திரம் எது ?

*கார்த்திகை மாதம், கார்த்திகை நக்ஷத்திரம்.*

166. திருமங்கையாழ்வாரின் பிற பெயர்கள் யாவை ?

*நீலன், கலியன், பரகாலன் ஆலிநாடன், அரட்டமுக்கி, அடையார் சீயம், மங்கை வேந்தன், அருள்மாரி, கொங்குமலி குழலியார் வேள், குறையலாளி என்பனவாகும்.*

167. கலியன் இயற்றிய பிரபந்தங்கள் யாவை ?

*பெரியதிருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருவெழுகூற்றிருக்கை, சிறியதிருமடல், பெரியதிருமடல், திருநெடுந்தாண்டகம்.*

168. தமிழ் வேதத்தின் அங்கங்களுக்குச் சமமாக யாருடைய பிரபந்தங்கள் கருதப்படுகின்றன ?

*திருமங்கையாழ்வாருடைய ஆறு பிரபந்தங்கள்.*

169. பெரிய திருமொழியில் எத்தனை பாசுரங்கள் உள்ளன ?

*1084 பாசுரங்கள்.*

170. பெரிய திருமொழியில் எத்தனை பதிகங்கள் உள்ளன ?

*108 பதிகங்கள் உள்ளன.*

171. பெரிய திருமொழியில் முதல் பாசுரத்தின் முதல் சொல் எது ?

*வாடினேன்.*

172. திருக்குறுந்தாண்டகத்தில் எத்தனை பாசுரங்கள் உள்ளன ?

*20 பாசுரங்கள்.*

173. திருக்குறுந்தாண்டகத்தில் முதல் பாசுரத்தின் முதல் சொல் எது ?

*நிதியினை.*

174. திருவெழுகூற்றிருக்கையில் எத்தனை பாசுரங்கள் உள்ளன ?

*1 பாசுரம்.*

175. திருவெழுகூற்றிருக்கையில் முதல் சொல் எது ?

*ஒரு.*

176. சிறிய திருமடலில் எத்தனை கண்ணிகள் உள்ளன ?

*77 ½ கண்ணிகள் கொண்ட ஒரு பாட்டு.*

177. சிறிய திருமடலில் முதல் சொல் எது ?

*காரார்.*

178. பெரிய திருமடலில் எத்தனை கண்ணிகள் உள்ளன ?

*148½ கண்ணிகள் கொண்ட ஒரு பாட்டு.*

179. பெரிய திருமடலில் முதல் சொல் எது ?

*மன்னிய.*

180. திருநெடுந்தாண்டகத்தில் எத்தனை பாசுரங்கள் உள்ளன ?

*30.*

181. திருநெடுந்தாண்டகத்தில் முதல் பாசுரத்தில் உள்ள முதல் சொல் எது ?

*மின்னுருவாய்.*

182. எத்தனை திவ்ய தேசங்களைத் திருமங்கையாழ்வார் மங்களாஸாசனம் செய்துள்ளார் ?

*86.*

183. வடபாரதத்தின் பெரும்பாலான திவ்ய தேசங்களை மங்களாசாசனம் செய்த ஆழ்வார் யார் ?

*திருமங்கையாழ்வார்.*

184. திருமங்கையாழ்வாரின் அந்தரங்கர்கள் யாவர் ?

*1) தோலா வழக்கன் 2) நீர்மேல் நடப்பான்*

*3) நிழலில் ஒதுங்குவான் 4) தாள்ஊதுவான்*

185. திருமங்கையாழ்வாரின் குதிரையின் பெயர் என்ன ?

*ஆடல் மா.*

186. திருமங்கை மன்னன் எந்த இடத்தில் திருமந்தரார்த்தத்தைப் பெற்றார் ? எந்த திவ்யதேசத்தெம்பெருமானிடம் பெற்றார் ?

*திருமணங்கொல்லை, வயலாளி மணவாளன்.*

187. திருமங்கையாழ்வார் எந்த நன்னாளில் திருமந்திரத்தைப் பெற்றார் ?

*பங்குனி உத்திரத்திற்கு முன் இரவு.*

188. திருமங்கையாழ்வாரின் துணைவியின் பெயர் என்ன ? அவர் பிறந்த திவ்ய தேசம் எது ?

*குமுதவல்லி, அண்ணன் கோயில் என்கிற திருவெள்ளக்குளத்தில் பிறந்தார்.*

189. இருந்தமிழ் நூற்புலவர் என்று தம்மைத்தாமே கூறிக் கொள்ளும் ஆழ்வார் யார் ?

*திருமங்கையாழ்வார்.*

190. நாலுகவிப்பெருமாள் என்று அழைக்கப்படுபவர் யார் ?

*திருமங்கையாழ்வார்.*

191. திரு இந்தளூர்ப் பெருமானிடம் கோபித்துத் திரும்பிய ஆழ்வார் யார் ?

*திருமங்கையாழ்வார்.*

192. திருமங்கையாழ்வார் சீர்காழியில் யாரை வாதப் போரில் வென்றார் ? அதற்குப் பரிசாக எதைப் பெற்றார் ?

*திருஞானசம்பந்தர் என்னும் சைவக்குரவரை வென்றார். திருஞான சம்பந்தரின் வேல் திருமங்கையாழ்வாருக்கு பரிசாக சமர்ப்பிக்கப்பட்டது.*

193. மாறன் பணித்த தமிழ் மறைக்கு ஆறங்கம் கூற அவதரித்தவர் யார் ?

*திருமங்கையாழ்வார்.*

194. திருவரங்கத்தில் திருஅத்யயன உற்சவத்தை முதன்முதலில் தொடங்கி நடத்தியவர் யார் ?

*திருமங்கையாழ்வார்.*

195. பட்டர் வேதாந்தியான நஞ்சீயரோடு வாதத்தில் வெற்றிபெற எந்தப்பிரபந்தம் உதவியது ?

*திருநெடுந்தாண்டகம்.*

196. திருமங்கையாழ்வாருக்கு நிதி கொடுத்த பெருமாள் யார் ? எங்கே கொடுத்தார் ?

*திருஅத்தியூரில் எழுந்தருளியிருக்கும் வரதராஜப்பெருமான் (பேரருளாளப்பெருமாள்) வேகவதி ஆற்றின் கரையில் கொடுத்தார்.*

197. திருமங்கையாழ்வார் திருமதிள் கைங்கர்யம் செய்த இடம் எது ?

*திருவரங்கம்.*

198. திருமங்கையாழ்வாரின் மறு அவதாரமாகக் கருதப்படுபவர் யார் ? அவருக்கு மற்றொரு பெயர் என்ன ?

*நம்பிள்ளை, கலிகன்றிதாசர்.*

199. திருமங்கையாழ்வார் பரமபதித்த ஸ்தலம் எது ?

*திருக்குறுங்குடி.*

## IX

200. ஆண்டாள் அவதரித்த திவ்யதேசம் எது ? அதற்கு வேறு பெயர் என்ன ?

*ஸ்ரீவில்லிபுத்தூர் - புதுவை*

201. ஆண்டாள் அவதரித்த மாதம், நட்சத்திரம் எது ?

*ஆடி மாதம், பூரம் நட்சத்திரம்.*

202. ஆண்டாள் அருளிய நூல்கள் யாவை ?

*திருப்பாவை, நாச்சியார் திருமொழி.*

203. திருப்பாவையில் உள்ள பாசுரங்கள் எத்தனை ?

*30.*

204. நாச்சியார் திருமொழியில் உள்ள பாசுரங்கள் எத்தனை ?

*143.*

205. திருப்பாவையில் தொடக்கச் சொல் எது ?

*மார்கழி.*

206. நாச்சியார் திருமொழியில் எத்தனை பதிகங்கள் உள்ளன ?

*14 பதிகங்கள்.*

207. நாச்சியார் திருமொழியில் முதற்பாசுரத்திலுள்ள முதல் சொல் எது ?

*தை.*

208. "சூடிக்கொடுத்த நாச்சியார்" பெயர்க்காரணம் கூறுக ?

*வடபெரும் கோயில் உடையான், கோதை சூடிக்கொடுத்த மாலையை விரும்பி ஏற்றதால் கோதைக்கு இப்பெயர் ஏற்பட்டது.*

209. ஆண்டாள் எந்த அர்ச்சாவதாரப் பெருமாளை மாலையிட்டு மணந்தாள் ?

*ஸ்ரீரங்கநாதன்.*

210. திருப்பாவைஜீயர் என்றழைக்கப்படுபவர் யார் ? காரணம் என்ன ?

*ஸ்ரீராமானுஜர். இவர் திருப்பாவையின் கருத்தில் மனத்தைப் பறிகொடுத்தவர். இவர் திருப்பாவையை 'கோதோபநிஷத்' என்று போற்றி மாதுகர ஸமயத்தில் அநுஸந்தித்தார்.*

211. பாவை நோன்பு, பாகவதத்தில் பெறும் பெயர் என்ன ?

*காத்தியாயினி விரதம்.*

212. கண்ணனுக்கு உகந்த மாதம் எது ?

*மார்கழி.*

213. நந்தகோபன் வைத்திருந்த ஆயுதம் எது ?

*கூர்வேல்.*

214. பகல்பத்து இராப்பத்து, இயற்பா உற்சவம் ஆகியவற்றை முறைப்படுத்தி நடத்த எந்த ஆசார்யர் ஏற்பாடு செய்தார் ?

*நாதமுனிகள்.*

215. எவற்றைப் பாவை நோன்பாளர்கள் விலக்குகிறார்கள் ?

*நெய் அருந்துவது, பால் உண்பது, மையிடுவது, மலர் சூட்டுவது, புறங்கூறுவது, மேலையார் செய்யாதன செய்வது.*

216. எவற்றைப் பாவை நோன்பின் போது கைக் கொள்வார்கள் ?

*நாட்காலே நீராடி, பரமனடிபாடி, ஐயமும் பிச்சையும் அளித்து, உய்யும் வழிபெற்றோமே என எண்ணியபடி வாழ்வார்கள்.*

217. திருப்பாவை முதற்பாடலில் முக்கியமான செய்தி என்ன ?

*நாராயணனே நமக்கே பறை தருவான் என்பது.*

218. திருப்பாவையின் மூன்றாம் பாடலில் கூறப்படும் அவதாரம் எது ?

*திரிவிக்ரம அவதாரம். (ஓங்கி உலகளந்த அவதாரம்)*

219. புள் அரையன் யார் ?

*ஸ்ரீகருடன்.*

220. கடலை ஆழி என்றது ஏன் ?

*ஆழங்காண முடியாததால் ஆழி எனப்பட்டது.*

221. தூய பெருநீர் கொண்ட நதி எது ?

*யமுனை.*

222. மனத்துக்கினியான் யார் ?

*ஸ்ரீராமன்.*

223. நந்தகோபாலன் அறம் செய்வது எவற்றை ?

*ஆடை, தண்ணீர், சோறு என வாரி வழங்குவான்.*

224. நந்தகோபாலன் மருமகள் யார் ?

*நப்பின்னை.*

225. பரமன் துயில்கின்ற இடங்களாக திருப்பாவை குறிப்பது எவற்றை ?

*1. ஆலிலை 2. பாற்கடல்.*

226. திருப்பாவையில் குறிப்பிடப்படும் விளக்குகள் யாவை ?

கோலவிளக்கு, அணிவிளக்கு, குத்துவிளக்கு மற்றும் குலவிளக்கு.

227. பஞ்சசயனம் – விளக்குக ?

*மென்மை, பரிமளம், வெண்மை, அழகு, குளிர்ச்சி பொருந்திய சயன ஆசனம்.*

228. முப்பத்து மூன்று வகையான தேவர்கள் யார் ?

*உருத்திரர்கள் 11 ஆதித்தியர்கள் 12 வசுக்கள் 8 அசுவினி தேவதைகள் 2.*

229. கண்ணனின் அருள் நோக்கு எவற்றைப் போக்கடிக்கும் ?

*சாபத்தையும் நீக்கும், பாபத்தையும் நீக்கும்.*

230. திருப்பாவையில் குறிக்கப்படுவன :–

*ஒரு கொடி - மாதவி*

*ஒரு குன்று - கோவர்த்தனம்*

*ஒரு நகர் - வட மதுரை*

*ஒரு தீவு - இலங்கை*

*ஒருத்தி - யசோதை (அ) தேவகி*

*ஒரு விளையாட்டுப் பொருள் - கைப்பந்து*

231. ஆண்டாள் கண்ணனின் மேனியையும், கண்ணையும், முகத்தையும் எவ்வாறு வருணிக்கிறாள் ?

*"கார்மேனிச் செங்கண் கதிர்மதியம் போல் முகத்தான்".*

232. ஆண்டாள் வள்ளல் என்று குறிப்பிட்ட பாண்டிய நாட்டு திவ்வியதேசப்பெருமாள் யார் ?

*மாலிருஞ்சோலை மணாளனார்.*

233. யார் யார் வந்திருந்து தன்னை மகட்பேசி மந்திரித்ததாக ஆண்டாள் கூறுகிறாள்?

*"இந்திரனுள்ளிட்ட தேவர் குழாமெல்லாம்".*

234. கோவிந்தா – பொருள் தருக

*பசுக்களைக் காப்பவனே அனைத்து உயிர்களையும் காப்பவனே.*

235. கூடார் என்றால் யார் ?

*கண்ணனுடனும் அவன் அடியார்களுடனும் கூடாதவர்களைக் குறிக்கும்.*

236. கறவைகள் பின் செல்பவர் யாவர் ?

*ஆயர்.*

237. வங்கக்கடல் என ஆண்டாள் குறிப்பிடுவது எக்கடலை ?

*திருப்பாற்கடல்.*

238. கண்ணன் உரலில் கட்டுண்டதைக் குறிக்கும் திருப்பாவைத் தொடர் ?

*தாயைக்குடல் விளக்கம் செய்த தாமோதரன்.*

239. வத்ஸாசுரன் –– கபித்தாசுரன் பற்றித் திருப்பாவையில் இடம் பெறும் தொடர் எது ? எங்கு கூறப்படுகிறது ?

*கன்று குணிலா எறிந்தாய் என்பதால் கூறப்படுகிறது.*

240. அமுதம் கடைந்த வரலாறு காட்டும் தொடர்.......

*வங்கக்கடல் கடைந்த மாதவனை.*

241. திருப்பாவையின் முக்கியத்துவம் யாது ?

*தினமும் எல்லா ஸந்நிதிகளில் தவறாது ஓதப்பட்டு வருகிறது. ஒவ்வொரு வைஷ்ணவனும் இதை நாள்தோறும் பாராயணம் செய்ய வேண்டும்.*

242. திருப்பாவையில் எந்த ஒரே பாடல் மட்டுமே முழுப்பலனையும் தரும் ?

*சிற்றஞ்சிறுகாலே (29).*

243. திருப்பாவை அனுசந்திப்பதின் பயன் என்ன ?

*எங்கும் திருவருள் பெற்று இன்புறுவதே.*

244. திருப்பாவைக்கு மூவாயிரப்படி உரையருளியவர் யார் ?

*பெரியவாச்சான் பிள்ளை.*

245. திருப்பாவைக்கு ஆறாயிரப்படி உரை அருளியவர் யார் ?

*அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்.*

246. ஆண்டாள் வாழ்வில் காட்டப்பட்ட அற்புதமான சமுதாயச் செய்தி என்ன ?

*பெண்ணைப் பெற்றாலும் தந்தைக்குப் பெருமை கிடைக்கும் என்பதே (பெரியாழ்வார் அரங்கனுக்கே மாமனரானார்).*

247. கோதை விஷயமான வடமொழி ச்லோகங்கள் யாவை ?

*வேதாந்ததேசிகர் வழங்கிய கோதாஸ்துதி, அநந்தாழ்வான் சாதித்த கோதா சதுச்லோகீ மற்றும் கோதாமங்களம் ஆகியவை.*

248. யாருடைய அம்சம் பலராமன் ?

*ஆதிசேஷனின் அம்சம்.*

249 a.“மார்கழித் திங்கள் ” என்று தொடங்கும் பாசுரம் எந்த பிரபந்தத்தில் உள்ளது ?

*திருப்பாவையில் உள்ளது.*

249 b.“வங்கக்கடல்” என்று ஆண்டாள் குறிப்பிடுவது எதை ? எப்படி ?

*திருப்பாற்கடல் - வங்கம் = அலை, வங்கம் = கப்பல்*

*அலைகள் மிக்க கடல், எம்பெருமானாகிய கப்பல் உள்ள கடல்*

# X

250. ஆழ்வார்கள் அருளிய நாலாயிர திவ்யப்பிரபந்தத்தையும் மீண்டும் உலகுக்குக் கொண்டு வந்தவர் யார் ?

*ஸ்ரீமந்நாதமுநிகள்.*

251. நாதமுனிகளின் அவதாரஸ்தலம் எது ?

*வீர நாராயணபுரம் என்னும் (காட்டு மன்னார்குடி)காட்டு மன்னார் கோயில்.*

252. நாதமுனிகள் யாருடைய திருக்குமாரர் ?

*ஈச்வரபட்டாழ்வார்.*

253. நாதமுனிகள் எந்த மாதத்தில் எந்த திருநக்ஷத்திரத்தில் அவதரித்தார் ?

*ஆனி மாதம் அனுஷம்.*

254. நாதமுனிகள் எந்த குலத்தைச் சார்ந்தவர் ?

*சொட்டைக்குலம்.*

255. நாதமுனிகளின் சிஷ்யர்களில் முக்கியமானவர்களைக் கூறு ?

*குருகைக் காவலப்பன், உய்யக் கொண்டார், திருக்கண்ண மங்கையாண்டான்.*

256. நாதமுனிகள் நாலாயிரத்தைப் பற்றித் தெரிந்து கொள்ள உதவிய பதிகம் யாது ?

*"ஆராவமுதே" என்னும் நம்மாழ்வாரின் திருவாய்மொழிப்பதிகம் ஆகும்.*

257. கண்ணி நுண் சிறுத்தாம்பை நாதமுனிகள் எத்தனை முறை ஜபித்தார் ?

*பன்னீராயிரம் முறை.*

258. நாதமுனிகளுக்கு நாலாயிரம் பாசுரங்களையும் கொடுத்தவர் யார் ?

*நம்மாழ்வார் (யோக தசையில்).*

259. நாதமுனிகள் கங்கை கொண்ட சோழ புரத்தில் இருந்தபோது உலகுக்குச் செய்த நன்மை என்ன ?

*திவ்யப்பிரபந்தங்களை திவ்ய கானத்திலே பாட, தாளம், இசை முதலியவற்றை ஏற்படுத்தினார்.*

260. நாதமுனிகளுடைய திருக்குமாரர் பெயர் என்ன ?

*ஈச்வரமுனிகள்.*

261. நாதமுனிகள் குருகைக் காவலப்பனுக்கு உபதேசித்த ரஹஸ்யம் எது ?

*யோகரஹஸ்யம்.*

262. நாதமுனிகளுக்குப் பரமபத ப்ராப்தி எந்த ஊரில் கிடைத்தது ?

*கங்கை கொண்ட சோழபுரம் அருகில்.*

263. உய்யக் கொண்டாருடைய இயற்பெயர் என்ன ?

*புண்டரீகாக்ஷர்.*

264. உய்யக்கொண்டாருடைய அவதார ஸ்தலம் எது ?

*திருவெள்ளறை.*

265. உய்யக்கொண்டார் எந்த மாதம் எந்த திருநக்ஷத்திரத்தில் அவதரித்தார் ?

*சித்திரை மாதம், கார்த்திகை நக்ஷத்திரம்.*

266. நாதமுனிகள் உய்யக் கொண்டாருக்கு அருளிய ரஹஸ்யம் எது ?

*ஆழ்வார்களின் அருளிச்செயல் ரஹஸ்யம்.*

267. மணக்கால் நம்பி அவதரித்த மாதம் நக்ஷத்திரம் எது ?

*மாசி மாதம் மக நக்ஷத்திரம்.*

268. மணக்கால் நம்பி ஆளவந்தாரைக் காண வரும்போது தினமும் கொடுத்தது எது ?

*தூதுவளைக் கீரை.*

269. நாதமுனிகள் தம் பேரரான ஆளவந்தாருக்குத் தந்தருள வைத்த ரஹஸ்யார்த்தங்கள் யார் மூலம் ஆளவந்தார்க்கு கிடைத்தது ?

*மணக்கால் நம்பி மூலம்.*

270. ஸ்ரீமந் நாதமுனிகளுடைய திருப்பேரனார் பெயர் என்ன ?

*யமுனைத்துறைவர், பின்னர் ஆளவந்தார் என்கிற திருநாமம் இவருக்கு வாய்த்தது.*

271. ஆளவந்தார் அவதரித்த ஸ்தலம் எது ?

*காட்டு மன்னார்கோயில்.*

272. ஆளவந்தார் அவதரித்த மாதம், திருநக்ஷத்திரம் எது ?

*ஆடி மாதம், உத்திராடம்.*

273. ஆளவந்தார் தகப்பனார் பெயர் என்ன ?

*ஈச்வரமுனிகள்.*

274. ஆளவந்தார் அருளிச்செய்த கிரந்தங்களில் சிலவற்றை கூறுக.

*கீதார்த்த சங்கிரஹம், ஸ்தோத்திர ரத்தினம், சதுச்லோகி.*

275. ஆளவந்தாரின் சீடர்களின் பெயர்களைக் கூறு ?

*1. பெரியநம்பி 2. திருக்கோட்டியூர் நம்பி*

*3. பெரிய திருமலை நம்பி 4. திருமாலை ஆண்டான்*

*5. திருவரங்கப்பெருமாள் அரையர் 6. திருக்கச்சி நம்பி*

*7. மாறனேர் நம்பி*

276. யமுனைத் துறைவருடன் வாதப்போர் செய்து தோற்றவர் யார்?

ஆக்கியாழ்வான்.

277. யமுனைத்துறைவர் வாதிடும்போது ஆக்கியாழ்வானிடம் கூறிய மூன்று தொடர்கள் யாவை ?

1. உன் தாய் மலடி அல்லள்
2. ராஜா ஸார்வ பௌமன்
3. ராஜ பத்தினி பதிவ்ரதை

278. ஆளவந்தார் குருகை காவலப்பனிடம் யோக ரஹஸ்யத்தை பெற்றாரா ?

இல்லை.

279. ஆளவந்தார் திருவனந்தபுரம் அனந்த சயனப்பெருமாளை ஸேவிக்கக் காரணமாயிருந்த திருவாய்மொழிப்பதிகம் எது ?

"கெடுமிடராயவெல்லாம்" என்கிற பதிகம்.

280. திருக்கண்ணமங்கையாண்டான் யாருடைய சிஷ்யர் ?

நாதமுனிகள்.

281. திருக்கண்ணமங்கையாண்டான் அவதரித்த ஸ்தலம் எது ?

திருக்கண்ணமங்கை.

282. திருக்கண்ணமங்கையாண்டான் எந்த மாதம் எந்த நக்ஷத்திரத்தில் அவதரித்தார் ?

ஆனி திருவோணம்.

283. மாறனேர் நம்பிக்குச் சரம கைங்கர்யம் செய்த ஆசார்யர் யார் ?

பெரிய நம்பி.

284. திருக்கோட்டியூர் நம்பி ஊர் எது ?

திருக்கோட்டியூர்.

285. எம்பெருமானார் என்கிற திருநாமத்தை இராமனுஜருக்குச் சூட்டியவர் யார் ?

திருக்கோட்டியூர் நம்பி.

286. திருக்கச்சி நம்பியின் அவதாரஸ்தலம் எது ?

புஷ்பமங்களம் என்னும் பூவிருந்தவல்லி.

287. திருக்கச்சி நம்பிகளிடம் நேரில் உரையாடிய அர்ச்சாவதாரப் பெருமாள் யார் ?

காஞ்சி தேவராஜர்.

288. திருக்கச்சி நம்பிகள் வரதராஜரைத் துதித்து அருளிய கிரந்தம் எது ?

*தேவராஜாஷ்டகம்.*

289. எம்பெருமானார் வெள்ளைசாத்தி எழுந்தருளிய இடம் எது ?

*திருநாராயணபுரம்.*

290. திருநாராயணபுரம் சம்பத்குமாரப்பெருமாளை, டெல்லி பாதுஷாவிடமிருந்து மீட்டு வந்தவர் யார் ?

*ஸ்ரீராமானுஜர்.*

291. யார் மூலமாக ராமானுஜர் ஆறு வார்த்தைகள் பெற்றார் ? யாரிடமிருந்து பெற்றார் ?

*திருக்கச்சி நம்பிகள்மூலம் காஞ்சி வரதராஜனிடமிருந்து.*

292. ஆளவந்தார் ராமானுஜரை எவ்வூரில் கடாக்ஷித்தார் ?

*காஞ்சியில் கரியமாணிக்கப்பெருமாள் சந்நிதியில்.*

293. 'ஆம் முதல்வன் இவன்' என்று கூறி ஆளவந்தார் யாரை கடாக்ஷித்தார் ?

*ராமானுஜரைக் கடாக்ஷித்தார்.*

294. ராமானுஜர் வரதராஜப்பெருமாளுக்கு எந்தக்கிணற்றில் இருந்து தீர்த்தம் கொணர்ந்தார் ?

*சாலைக்கிணறு.*

295. யாதவப்பிரகாசர் ராமானுஜரை அழிக்க மேற்கொண்ட உபாயம் யாது ?

*கங்கையில் தள்ளி முடித்தல்.*

296. காஞ்சியில் இருந்து ராமானுஜர் திருவரங்கம் வருவதற்குத் திருவரங்கராஜன் யாரை அனுப்பினான் ?

*திருவரங்கப்பெருமாள் அரையர்.*

297. யார் அமுது செய்த மிகுதியை ராமானுஜர் அமுது செய்ய விரும்பினார் ?

*திருக்கச்சி நம்பிகள்.*

298. ராமானுஜரின் சிறிய தாயார் மகனின் பெயர் என்ன ?

*கோவிந்தன்.*

299. ராமானுஜரின் மருமகன் யார் ?

*தாசரதி என்கிற முதலியாண்டான்.*

300. காஞ்சியில் ராமானுஜர் இருந்த போது அவரை ஆசார்யராகக் கொண்டவர்கள் யாவர் ?

*கூரத்தாழ்வான், முதலியாண்டான்.*

301. ராமானுஜரிடம் வாதிட்டுப் பின்பு வைஷ்ணவரான ஆசார்யர் யார் ?

*அருளாளப்பெருமாள் எம்பெருமானார் (யஜ்ஞமூர்த்தி).*

302. விஷ்ணுசித்தரை எங்களாழ்வான் என்று பெயரிட்டு முதன்முதலில் அழைத்தவர் யார் ?

*ராமானுஜர்.*

303. ராமானுஜரின் பெற்றோர்கள் யாவர் ?

*தந்தை கேசவசோமயாஜீ, தாய் பூமிப்பிராட்டி என்கிற காந்திமதி அம்மையார்.*

304. ராமானுஜரின் வேதாந்த கிரந்தங்கள் எத்தனை ?

*ஐந்து.*

305. ராமானுஜர் இயற்றிய நூல்களைக் கூறுக ?

*1. வேதாந்த தீபம்* *2. வேதாந்த சாரம்*
*3. வேதார்த்த ஸங்கிரஹம்* *4. ஸ்ரீபாஷ்யம்*
*5. கீதாபாஷ்யம்* *6. சரணாகதி கத்யம்*
*7. ஸ்ரீரங்க கத்யம்* *8. வைகுண்டகத்யம்*
*9. நித்யம்*

306. ராமானுஜரின் வேறு பெயர்களை எழுதுக.

*1. இளையாழ்வார்* *2. எம்பெருமானார்*
*3. கோயில் அண்ணர்* *4. யதிராஜர்*
*5. உடையவர்* *6. ஸ்ரீபாஷ்யகாரர்*
*7. லக்ஷ்மணமுனி*

307. ராமானுஜர் எத்தனை ஆண்டுகள் வாழ்ந்திருந்தார் ?

*120.* (கி.பி. 1017 – 1137)

308. ராமானுஜருக்குத் துவயமந்திர உபதேசம் செய்தவர் யார் ?

*பெரியநம்பிகள், மதுராந்தகத்தில்.*

309. ராமானுஜரின் ஆசார்யர்கள் எத்தனை பேர் ? அவர்கள் யாவர் ?

*ஐவர், 1) பெரிய நம்பிகள், 2) பெரியதிருமலை நம்பி, 3) திருக்கோட்டியூர் நம்பிகள், 4) திருவரங்கப்பெருமாள் அரையர், 5) திருமாலை ஆண்டான்*

310. இராமானுஜர், வேதாந்தப் பாடத்தை எந்த ஊரில் யாரிடத்தில் வாசித்தார் ?

*காஞ்சிக்கு அடுத்து திருப்புட்குழியில் யாதவப்பிரகாசரிடத்தில்.*

311. ராமானுஜர் எந்த மொழியில் நூல்களை எழுதினார் ?

*ஸம்ஸ்கிருதத்தில்.*

312. ராமானுஜரை, 'கோயிலண்ணரே' என்று அழைத்தவர் யார் ?

*ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள்.*

313. பூலோகத்தில் ராமானுஜரின் முன் அவதாரங்கள் யாவை ?

*ஆதிசேஷன், லக்ஷ்மணன், பலராமன்.*

314. கோவிந்த ஜீயர் என்னும் பெயரை அடைந்தவர் யார் ?

*யாதவப்ரகாசர்.*

315. எம்பெருமானாருடைய தண்டமாகவும், பவித்ரமாகவும் கருதப்படுபவர் யாவர் ?

*முதலியாண்டானும், கூரத்தாழ்வானும்,*

316. எம்பெருமானுக்குத்திருவாராதனம் செய்யும் முறையைக் கூறும் ராமானுஜரின் நூல் எது ?

*நித்யகிரந்தம்.*

317. ராமானுஜரைப் பற்றிய பிரசித்தமான தமிழ் நூல் எது ?

*இராமானுச நூற்றந்தாதி.*

318. இராமானுச நூற்றந்தாதியை இயற்றியவர் யார்

*திருவரங்கத்தமுதனார்.*

319. எம்பெருமானார் தரிசனம் என்று பேரிட்டு நாட்டிவைத்தவர் யார் ?

*நம்பெருமாள்.*

320. ராமானுஜரின் ஞான புத்திரர் யார் ?

*திருக்குருகைப்பிரான் பிள்ளான்.*

321. ராமானுஜர் மந்த்ரார்த்தங்களைப் பெறத் திருக்கோட்டியூருக்கு எத்தனை முறை நடந்தார் ?

*18 முறை.*

322. எம்பெருமானாரால் நியமிக்கப்பட்ட ஸிம்மாசனாதிபதிகள் எத்தனை பேர் ?

*74 பேர்.*

323. எம்பாரின் தம்பி பெயர் என்ன ?

*சிறிய கோவிந்தப்பெருமாள்.*

324. சிறிய கோவிந்தப் பெருமாளின் திருக்குமாரர் பெயர் என்ன ?

*ஸ்ரீபராங்குச நம்பி.*

325. ராமானுஜரின் பாத நிழல் என்று கூறப்படுபவர் யார் ?

*எம்பார்.*

326. எம்பாருக்கு பஞ்சஸம்ஸ்காரம் செய்தவர் யார் ?

*பெரியதிருமலைநம்பி.*

327. ஸ்ரீ வைஷ்ணவர்கள் ராமானுஜரின் ஆசார்யர்களுக்குச் சமமாக மதித்த மற்றொருவர் யார் ?

*திருக்கச்சி நம்பிகள்.*

328. உள்ளங்கைக்கொணர்ந்த நாயனார் என்று குறிக்கப்பட்டவர் யார் ?

*கோவிந்தர் என்ற எம்பார்.*

329. எம்பெருமானாருக்கு அடுத்த ஒராண்வழி ஆசார்யர் யார் ?

*எம்பார்.*

330. திருவரங்கத்தமுதனாரின் ஆசார்யர் யார் ?

*கூரத்தாழ்வான்.*

331. தரிசனத்திற்காகத் தம் நேத்ரத்தையிழந்தவர் யார் ?

*கூரத்தாழ்வான்.*

332. திருமலையில் நந்தவனக் கைங்கர்யத்தில் ஈடுபட்டவர் யார் ?

*அனந்தாழ்வான்.*

333. எங்களாழ்வான் அவதார ஸ்தலம் எது ?

*திருவெள்ளறை.*

334. பட்டருடைய பேரவையில் இருந்த தமிழ்ப்புலவர்கள் இருவரைக் கூறுக ?

*ஆலவாயுடையான், ஒப்பிலாத பெருமாள்.*

335. "சரமோபாய நிர்ணயம்", "அந்திமோபாய நிஷ்டை" என்கிற நூல்களை இயற்றியவர் யாவர் ?

*சரமோபாய நிர்ணயம் - நாயனாராச்சான்பிள்ளை*

*அந்திமோபாயநிஷ்டை - நாயனாராச்சான் பிள்ளை.*

336. நம்பிள்ளையின் காலக்ஷேபத்தை ஏடுபடுத்தியவர் யார் ?

*வடக்குத்திருவீதிப்பிள்ளை.*

337. "ஸ்ரீபகவத்குணதர்ப்பணம்" என்னும் நூலை இயற்றியவர் யார் ? எதைப் பற்றிய நூல் இது ?

*ஸ்ரீபராசரபட்டர், ஸ்ரீஸஹஸ்ரநாமத்திற்கு வடமொழி உரை.*

338. ஸ்ரீகுணரத்ன கோசம் என்னும் நூலை இயற்றியவர் யார் ?

*பராசரபட்டர்.*

339. நம்பிள்ளை ஈடுவியாக்யானத்தை யாரிடம் கொடுத்தார் ?

*ஈயுண்ணி மாதவப்பெருமாளிடம்.*

340. நம்பிள்ளை எத்தனை ஆண்டுகள் வாழ்ந்திருந்தார் என்று பெரிய திருமுடி அடைவு கூறுகிறது ?

*105 ஆண்டுகள்.*

341. விலக்ஷண மோக்ஷாதிகாரி நிர்ணயம் என்னும் நூலை இயற்றியவர் யார் ?

*எறும்பியப்பா.*

342. பெரியவாச்சான் பிள்ளையின் திருக்குமாரர் பெயர் என்ன ?

*நாயானாராச்சான் பிள்ளை.*

343. நாலாயிரத்திற்கும் உரையியற்றியவர் யார் ?

*பெரியவாச்சான் பிள்ளை.*

344. பிள்ளைலோகாசார்யர் திருநாட்டுக்கு எழுந்தருளிய இடம் எது ?

*ஜ்யோதிஷ்குடி.*

345. பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்த ரஹஸ்யங்கள் எத்தனை ?

*பதினெட்டு.*

346. வடக்குத் திருவீதிப் பிள்ளையின் திருக்குமாரர்கள் யார் யார் ?

*1. பிள்ளை லோகாசார்யார்*

*2. அழகிய மணவாளப்பெருமாள் நாயனார்.*

347. ஈடுவ்யாக்யானம் என்று எதை அழைக்கிறோம் ?

*நம்பிள்ளையின் முப்பத்தாறாயிரப்படியை.*

348. ஈடுமுப்பத்தாறாயிரப் படியை நம்பிள்ளை சாதிக்க அதைப் பட்டோலை செய்தவர் யார் ?

*வடக்குத் திருவிதிப்பிள்ளை.*

349. ஸ்ரீவசனபூஷணத்திற்கு வ்யாக்யானம் இயற்றிய திருநாராயணபுரத்து ஆசார்யர் யார் ?

*ஆய் என்கிற ஜநந்யாசார்யர்.*

350. ஸ்ரீராமாயண தனிச்லோகி வ்யாக்யானம் செய்தவர் யார் ?

*பெரியவாச்சான்பிள்ளை.*

351. ஈடுமுப்பத்தாறாயிரப்படி என்பது எது ?

*திருவாய்மொழிக்கான நம்பிள்ளையின் வ்யாக்யானம்.*

352. பாதுகாஸஹஸ்ரம் என்ற உயர்ந்த கிரந்தத்தை இயற்றியவர் யார் ?

*ஸ்ரீ வேதாந்ததேசிகர்.*

353. ஸ்ரீவேதாந்த தேசிகர் எந்த திவ்ய தேசத்தில் தோன்றினார் ?

*தூப்புல், காஞ்சீபுரம்.*

354. ஸ்ரீவேதாந்த தேசிகர், அத்வைத மதத்தை நூறு வாதங்களால் கண்டித்து இயற்றிய நூல் யாது ?

*சததூஷணி.*

355. ஸ்ரீவேதாந்த தேசிகரின் ஆசாரியர் யார் ?

*அப்புள்ளார்.*

356. ஸ்ரீவேதாந்த தேசிகர் எம்பெருமானாரைப் போற்றி இயற்றிய நூலின் பெயர் என்ன ?

*யதிராஜ ஸப்ததி.*

357. ஸ்ரீஸ்வாமி தேசிகனுக்குப் பெரியபெருமாள் அருளிய விருதுகள் யாவை ?

*வேதாந்தாசார்யர், ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரர்.*

358. தேசிகரின் இயற்பெயர் என்ன ?

*வேங்கடநாதன்.*

359. தேசிகர் சிறுவயதில் (பால பருவத்தில்) யார் காலக்ஷேபத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டார் ?

*நடாதூரம்மாள்.*

360. முஸ்லிம்கள் படையெடுப்பின் பின் திருவரங்கத்தில் அமைதி நிலவ வேண்டும் என்று தேசிகர் இயற்றிய ஸ்தோத்திரத்தின் பெயர் என்ன ?

*அபீதிஸ்தவம்.*

361. தேசிகர் இயற்றிய அமலனாதிபிரான் வ்யாக்யானத்தின் பெயர் என்ன ?

*முனிவாஹனபோகம்.*

362. திருமந்திரத்வய சரமச்லோக விவரணமாக தேசிகரின் பிரசித்தமான நூல் எது ?

*ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரம்.*

363. "ஸ்ரீமான் வேங்கடநாதார்ய......" என்று தொடங்கும் தனியன் யாரைக் குறித்தது ?

*ஸ்ரீதேசிகரை.*

364. தேசிகன் ஆண்டாளுக்காக இயற்றிய வடமொழித் துதி யாது ?

*கோதாஸ்துதி.*

365. தேசிகர் இயற்றிய நாடகம் யாது ?

*ஸங்கல்பசூர்யோதயம்.*

366. தேசிகரின் திருக்குமாரரின் பெயரென்ன ?

*குமார வரதாசார்யர்.*

367. தேசிகர் ப்ராக்ருத மொழியில் எழுதிய நூல் எது ?

*அச்யுத சதகம்.*

368. தேசிகரின் தாயார், தகப்பனார் திருநாமங்கள் யாவை ?

*தாயார் - தோதாரம்மை*

*தகப்பனார் - அநந்தசூரி*

369. திருவாய்மொழிப்பிள்ளை அவதரித்த ஸ்தலம் எது ?

*குந்தீநகரம்.*

369 (a) திருவாய்மொழிப் பிள்ளையின் பிரதான சீடர் யார் ?

மணவாள மாமுனிகள்

369 (b) மணவாள மாமுனிகளின் அவதார ஸ்தலமாக வழங்கப்படும் திவ்ய தேசம் எது ?

ஆழ்வார் திருநகரி.

369 (c) மணவாள மாமுனிகள் யாருடைய அவதாரமாக வணங்கப்படுகிறார் ?

ராமாநுஜராக அவதரித்த ஆதிசேஷனின் அவதாரமாக வணங்கப்படுகிறார்.

369 (d) மணவாள மாமுனிகள் அவதார ஆண்டு, திங்கள், நக்ஷத்திரம் யாவை ?

கலியுகம் 4472 (கி.பி. 1370) ஸாதாரண ஆண்டு, ஐப்பசித் திங்கள் மூல நக்ஷத்திரம் ஆகும்.

369 (e) மணவாள மாமுனிகளின் மற்ற திருநாமங்கள் யாவை ?

பெரிய ஜீயர், ஸௌம்யஜாமாத்ரு முனி, வரவரமுனி, விசதவாக் சிகாமணி, ரம்யஜாமாத்ரு முனி, யதீந்த்ர ப்ரவணர், ஈடு முப்பத்தாறாயிரப் பெருக்கர்.

369 (f) மணவாள மாமுனிகள் பூர்வாச்ரம திருநாமம், திருவம்சத்தைப் பற்றிக் கூறுக.

திருநாமம் - அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்; தகப்பனார் - திகழக் கிடந்தான் திருநாவீறுடைய தா(ச)தரண்ணர்; தாயார் - ஸ்ரீரங்க நாச்சியார் (பிள்ளை உலகாரியரின் சீடரான கொல்லிகாவல தாஸரின் திருக்குமாரத்தி); மகன் - இராமாநுசம் பிள்ளை; போரன் - ஜீயர் நாயினார் (அபிராமவரர்)

369 (g) மணவாள மாமுனிகள் அருளிச் செய்த கிரந்தங்கள் யாவை ?

யதிராஜ விம்சதி, உபதேச ரத்தினமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி, ஆர்த்தி பிரபந்தம், தேவராஜ மங்களம், ஜீயர்படி திருவாராதன க்ரமம் (உரைநடையில்) மற்றும் பல தனிப் பாடல்கள்.

369 (h) மணவாள மாமுனிகளின் யதிராஜவிம்சதி பற்றி குறிப்பு வரைக.

யதிராஜ விம்சதி ஆழ்வார் திருநகரியில் சேவை ஸாதிக்கும் ராமாநுஜர் விஷயமாக பூர்வாச்ரமத்தில் ஆசார்யன் ஆணைக்கிணங்க அருளிச்செய்த 10 ச்லோகங்கள் கொண்ட வடமொழி ஸ்தோத்திர நூலாகும்.

369 (i) மணவாள மாமுனிகளின் உபதேச ரத்தினமாலை பற்றிய குறிப்பு வரைக.

உபதேச ரத்தினமாலை தமிழில் வெண்பா பாடல்களாலான அருளிச்செயலாகும். இதில் ஆழ்வார்கள், ஆண்டாள், மதுரகவிகள், எம்பெருமானார் ஆகியோர் அவதரித்த மாதங்கள், நாள்கள் கூறப்பட்டுள்ளன. எம்பெருமானாரின் இன்னருள், திருவாய்மொழிக்கான வியாக்யானங்கள், ஈடு பெற்ற முறை, பிள்ளை உலகாரியரின் ஸ்ரீவசனபூஷண நூலின் சிறப்பு, ஆசார்யனின் பெருமை, சிஷ்ய லக்ஷணம் முதலியவை கூறப்பட்டுள்ளன. ஸ்ரீவைஷ்ணவர்கள் தினமும் பாராயணம் செய்ய வேண்டியதொன்றாகும்.

369 (j) மணவாள மாமுனிகளின் திருவாய்மொழி நூற்றந்தாதி பற்றிய குறிப்பு வரைக.

தமிழில் 100 வெண்பா பாடல்களைக் கொண்ட அருளிச் செயலாகும்.

திருவாய்மொழி போல் அந்தாதி வடிவில் அமைந்ததாகும். முதல் பாடல் திருவாய்மொழியின் முதல் பதிகத்தின் முதல் பாசுரத்தின் முதல் வார்த்தையிலுள்ள ஓர் எழுத்து, சீர், அசை கொண்டு தொடங்கி (உதாரணம் - உயர்), இம்முதல் பாடலின் ஈற்றடியின் இறுதியில் திருவாய்மொழியின் இரண்டாம் பதிகத்தின் முதல் பாசுரத்தின் முதல் வார்த்தையிலுள்ள ஓர் எழுத்து, சீர், அசை அமையப்பெற்றதாகும். (உதாரணம் - வீடு). இங்ஙனம் திருவாய்மொழியின் நூறு பதிகங்களுக்குமாக அருளிச் செய்யப்பட்ட ஒவ்வொரு பாடலிலும் அந்த பதிகத்தின் பொருளும் கூறப்பட்டு திருவாய் மொழியை இயற்றிய நம்மாழ்வாரின் திருப்பெயர்களிலொன்றும் இடம் பெற்றிருக்கும். இதனை தினந்தோறும் பாராயணம் செய்வது ஸ்ரீவைஷ்ணவர்களின் கடமையாகும்.

369 (k) மணவாள மாமுனிக்ளின் ஆர்த்தி பிரபந்தம் பற்றிய குறிப்பு வரைக.

மணவாள மாமுனிகள் எப்பெருமானாரின் பெருமைகளைக் கூறித் தம்மை விரைவில் பரமபதத்தில் அவருடைய திருவடிக் கீழ்த் தொண்டாற்ற அருள் செய்யும்படிப் பிரார்த்திக்கின்ற அருளிச்செயலாகும்.

369 (l) மணவாள மாமுனிகளின் தேவராஜ மங்களம் பற்றிய குறிப்பு வரைக.

மாமுனிகள் திருக்கச்சிக்கு எழுந்தருளினபோது காஞ்சி வரதராஜரின் (அத்திகிரி அருளாளரின்) மங்களாசாஸனமாக அருளிச்செய்த வடமொழி நூலாகும்.

369 (m) மணவாள மாமுனிகள் அருளிச்செய்த வியாக்கியான கிரந்தங்கள் (உரை நூல்கள்) யாவை ?

பிள்ளை உலகாரியரின் ஸ்ரீவசந பூஷணம், முமுக்ஷுப்படி, தத்வத்ரயம் ஆகியவற்றிற்கும், அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் அருளிச்செய்த ஆசார்ய ஹிருதயத்திற்கும், அமுதனாரின் இராமாநுச நூற்றந்தாதிக்கும், பெரியாழ்வார் திருமொழியில் முதல் 400 பாசுரங்களுக்கும், அருளாளப் பெருமாள் எம்பெருமானாரின் ஞானஸாரம், பிரமேயஸாரம் ஆகியவற்றிற்கும் ஆகும்.

369 (n) மணவாள மாமுனிகள் விஷயமாக அருளிச் செய்யப்பட்டுள்ள கிரந்தங்கள் யாவை ?

வடமொழியில் - கந்தாடை அண்ணனின் வரவரமுனி அஷ்டகம், பிரதிவாதி பயங்கரம் அண்ணாவின் வரவரமுனி சதகம், வரவரமுனி சுப்ரபாதம், எறும்பியப்பாவின் பூர்வ தினசர்யை, உத்தரதினசர்யை, மற்றும் வரவரமுனி முக்தகம் ஆகும்.

தமிழில் - கோயிலண்ணனின் மணவாள மாமுனிகள், கண்ணிநுண் சிறுத்தாம்பு, அண்ணாவின் பாதாதிகேசமாலை, அப்பிள்ளாரின் ஸம்பிரதாய சந்திரிகை ஆகும்.

369 (o) மணவாள மாமுனிகளின் அஷ்டதிக்கஜங்களான சீடர்கள் யாவர் ?

பொன்னடிக்கால் ஜீயர் (வானமாமலை ஜீயர்), பரவஸ்து பட்டர்பிரான் ஜீயர், திருவேங்கட ராமாநுஜ ஜீயர் கோயிலண்ணன், பிரதிவாதி பயங்கரம் அண்ணா, எறும்பியப்பா, அப்பிள்ளை, அப்பிள்ளார் ஆகிய அஷ்டதிக்கஜங்களாவர்.

369 (p) மணவாள மாமுனிகளின் விஷயமான தனியன் எது ?

''ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம்

யதீந்த்ர ப்ரவணம் வந்தே ரம்யஜாமாத்ருமுனிம்'' என்பதாகும்.

369 (q) 'ஸ்ரீசைலேச' தனியன் எப்பொழுது எங்கே யார் அருளிச் செய்தார் ?

மணவாள மாமுனிகள் ஓராண்டு காலம் ஸ்ரீரங்கத்தில் பெரியபெருமாள் ஸன்னதியில் பெரிய திருமண்டபத்தில் திருவொய்மொழிக்கான வியாக்கியானங்களைக் கொண்டு காலக்ஷேபம் சாதித்தருள, சாற்றுமுறை தினமான ஆனந்த ஆண்டு ஆனி திருமூலத்தன்று ஒரு அர்ச்சகரின் சிறுவன் வடிவிலே வந்து பெரியபெருமாள் தாமே அருளிச் செய்தார். இதே ஸமயம் திருவதரி, திருநாராயணபுரம், திருவேங்கடம், அழகர் திருமலை முதலான திவ்ய தேசங்களிலும் இந்த தனியன் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸ்வப்ன மூலமாக அருளிச் செய்யப்பட்டது. கோயிலண்ணன் திருமாளிகைப் பெண்டிர்க்கு சிற்றோலை மூலமாகவும் வழங்கப்பட்டது.

369 (r) 'ஸ்ரீசைலேச' தனியனின் முக்கியத்துவம் என்ன ?

''ஸ்ரீசைலேச தயாபாத்ரம்'' என்பது ''ஓம்'' என்கிற பிரணவத்திற்கொப்பாகும். ''ஓம்'' என்பதில் உள்ள அகாரம் எம்பெருமான் ஸ்ரீமந்நாராயணனைக் குறிக்கிறது. மகாரம், எம்பெருமானின் இன்னருளுக்கு உரிய அடியவனான ஜீவனைக் (நம்மை) குறிக்கிறது. உகாரம் ஜீவன் (நாம்) எம்பெருமானுக்கே உரியவன் என்கிற ஒழிக்கவொண்ணா உறவு முறையைக் குறிக்கிறது. அதேபோல் ''ஸ்ரீசைலேச'' என்பது திருமலையப்பனான ஸ்ரீமந்நாராயணனைக் குறிப்பிடுகிறது. ''தயாபாத்ரம்'' என்பது அவனது இன்னருளுக்குரிய அடியவனான ஜீவனைக் (நம்மை) குறிப்பிடுகிறது. மீண்டும், ''தயாபாத்ரம்'' என்பது ஜீவன் (நாம்) எம்பெருமானுக்கே உரியவன் என்கிற ஒழிக்கவொண்ணா உறவுமுறையையும் குறிக்கிறது.

369 (s) அருளிச்செயல் ஓதும்பொழுது, தொடக்கத்திலும் முடிவிலும் ஏன் ''ஸ்ரீசைலேச'' தனியன் அநுஸந்திக்கப்படுகிறது ?

வேதவேதாந்தங்களை ஓதும்பொழுது தொடக்கத்திலும் முடிவிலும் 'ஓம்' அநுஸந்திக்கப்படுவதுபோல் அதற்கு இணையாக 'ஸ்ரீசைலேச தயாபத்ரம்' ஆழ்வார்களின் அருளிச் செயல் மற்றும் ஆசார்யர்களின் ஸ்தோத்ர நூல்களின் தொடக்கத்திலும் முடிவிலும் அநுஸந்திக்கப்படுகிறது.

369 (t) மாமுனிகள் காலத்தில் வாழ்ந்திருந்த மற்ற ஆசாரியர்கள் யார் யார் ?

ஆய் ஜனன்யாசார்யர், சடகோப ஜீயர், கிடாம்பி நாயினார்.

369 (u) மாமுனிகளின் திருவத்யயன தினமாக எந்த நாள் யாரால் எங்கு இப்பொழுதும் கொண்டாடப்படுகிறது ?

73 திருநக்ஷத்திரங்கள் வாழ்ந்திருந்து ருதிரோத்காரி ஆண்டு (கி.பி. 1444) மாசி மாத கிருஷ்ணபக்ஷ துவாதசியன்று ஆசாரியன் திருவடி அடைந்தார். இந்த நாள் மாமுனிகள் திருவத்யயன உற்சவ தினமாக ஸ்ரீரங்கத்தில் நம்பெருமாளால் கொண்டாடப் பெறுகிறது.

369 (v) மாமுனிகளின் திருவரசு எவ்விடத்திலுள்ளது ?

ஸ்ரீரங்கத்தில் வட திருக்காவேரிக் கரையிலுள்ள ஆளவந்தார் படித்துறைக்கு அருகில் அமைந்துள்ளது.

369 (w) சிக்கில் கிடாரம் என்கிற ஊர் மாமுனிகளோடு எப்படி ஸம்பந்தப்பட்டுள்ளது ?

மாமுனிகளின் தாய்வழி பாட்டனாரான கொல்லிகாவல தாஸர் வாழ்ந்த ஊர். இங்கு மாமுனிகள் தனது பிள்ளைப் பருவத்திலே வாஸம் செய்திருந்தார்.

369 (x) மாமுனிகளின் கிரந்தங்களுக்கு வியாக்கியானம் அருளிச் செய்தவர் யார் ?

பிள்ளைலோகம் ஜீயர் என்கிற ஆசார்யர் ஆவார்.

369 (y) மாமுனிகள் ஸ்ரீபாஷ்ய காலக்ஷேபம் எவ்விடத்தில் ஸாதித்தருளினார் ?

ஸ்ரீபெரும்பூதூரில் உடையவர் ஸன்னிதி பின்புறத்திலும், காஞ்சீபுரத்தில் சொன்னவண்ணம் செய்த பெருமாள் ஸன்னிதியில் பொய்கையாழ்வார் அவதார ஸ்தல மண்டபத்திலும் அருளிச்செய்தார்.

369 (z) மாமுனிகளின் திருவடி நிலைகளுக்கான திருநாமம் என்ன ?

பொன்னடியான் செங்கமலம்.

369 (aa) மாமுனிகளின் அஸாதாரண பெருமை என்ன ?

ஆசார்ய பரம்பரையில் முதல் ஆசார்யரான பெரியபெருமாள் தாமே மாமுனிகளைத் தமக்கு ஆசாரியராக ஏற்றுக்கொண்டதாகும்.

369 (ab) மாமுனிகளுக்குப் பெரியபெருமாள் அளித்த மற்ற ஸன்மானங்கள் எவை ?

பெரியபெருமாள் தமது சேஷ பர்யங்கமாகிற ஸிம்மாஸனத்தையும், பல்லவராயன் மடத்தையும் அளித்து கௌரவித்தார். ஸ்ரீரங்கத்தில் இந்த மடத்தில் மாமுனிகள் ஸன்னிதி உள்ளது.

369 (ac) ஸ்ரீரங்கத்தில் உள்ள மாமுனிகளின் ஸன்னிதியின் விசேஷம் என்ன ?

மாமுனிகள் தமது மடத்தில் காலக்ஷேப மண்டபத்தை பிள்ளை உலகாரியரின் திருமாளிகையிலிருந்து "ரகஸியம் விளைந்த மண்" என்று மண்ணை எடுத்து வந்து சமைத்து அம்மண்டபத்திற்குத் தமது ஆசார்யரான திருவாய்மொழிப் பிள்ளையின் திருநாமத்தைச் சாற்றியருளி சிஷ்ய பரிபாலனம் செய்து வந்தார். தமக்குத் தொண்டாற்றிக் கொண்டிருந்த அம்மையாருக்குத் தமது வெளுத்த திருமேனியைக் கொண்டு தாம் ஆதிசேஷன் அவதாரம் என்று காட்டியருளினார்.

369 (ad) திருவேங்கடத்தில் மாமுனிகள் ஏற்படுத்திய கைங்கர்யம் எவை ?

எம்பெருமானாரால் நிறுவப்பெற்ற ஜீயருக்கு உறுதுணையாக சிறிய கேள்வி அப்பன் ஜீயர் ஒருவரை நியமித்தார். பிரதிவாதி பயங்கரம் அண்ணாவைக் கொண்டு திருவேங்கடமுடையான் விஷயமாக ஸுப்ரபாதம், ஸ்தோத்திரம், பிரபத்தி, மங்களம் ஆகியவை அருளிச்செய்து தநுர்மாதம் (மார்கழி) நீங்கலாக மற்ற நாட்களில் அதிகாலையில் அநுஸந்திக்கச் செய்தார்.

370 உபதேச ரத்னமாலை எத்தனை வெண்பாக்களால் ஆனது ?

73 வெண்பாக்கள்.

371. உபதேச ரத்தின மாலைக்கு உரை எழுதியவர் யார் ?

*பிள்ளைலோகஞ்சீயர்.*

372. கோயில் கந்தாடை அண்ணன் என்பவர் யார் ?

*மணவளமாமுனிகள் சீடர்.*

373. கோயில் கந்தாடை அண்ணனின் திருக்குமாரர் பெயர் என்ன ?

*கோயில் கந்தாடை நாயன்.*

374. ஸ்ரீமணவாளமாமுனிகள் எந்த திவ்யதேசத்தில் திருவாய்மொழி காலக்ஷேபம் ஸாதித்தார் ?

*திருவரங்கத்தில்.*

375. ஈடு முப்பத்தாறாயிரப் பெருக்கர் யார் ?

*மணவாள மாமுனிகள்.*

376. திருவாய்மொழி நூற்றந்தாதியினை அருளிச்செய்தவர் யார் ?

*மணவாள மாமுனிகள்.*

377. ஸ்ரீ வைஷ்ணவ சம்பிரதாயத்தில் முதல் ஆசார்யர் யார் ?

*ஸ்ரீமன் நாராயணன்.*

378. எம்பெருமான் முதல் ஆசார்யன் என்பதைக் கூறும் தனியன் எது ?

*"லக்ஷ்மிநாதஸமாரம்பாம்" என்று ஆரம்பிக்கும் ச்லோகம்.*

379. பரத்வத்தில் மண்டிக்கிடக்கும் ஆழ்வார்கள் யாவர் ?

*பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார்.*

380. அந்தர்யாமித்துவத்திலே மண்டிக்கிடக்கும் ஆழ்வார் யார் ?

*திருமழிசையாழ்வார்.*

381. கிருஷ்ணாவதாரத்திலே மண்டிக்கிடக்கும் ஆழ்வார்கள் யாவர் ?

*நம்மாழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள்.*

382. ராமாவதாரத்திலே மண்டிக்கிடக்கும் ஆழ்வார் யார் ?

*குலசேகர ஆழ்வார்.*

383. அர்ச்சாவதார விசேஷமான திருவரங்கத்திலே மண்டிக்கிடக்கும் ஆழ்வார்கள் யாவர் ?

*தொண்டரடிப்பொடியாழ்வார், திருப்பாணாழ்வார்.*

384. ஸ்ரீயான மஹாலக்ஷ்மியை மார்பிலே தரித்திருப்பவன் என்ற பெயருடைய திருநாமம் எது ?

*ஸ்ரீதரன்.*

385. பெருமாளின் ஐந்து நிலைகள் யாவை ?

*1. பரத்வம் 2. வியூகம் 3. அந்தர்யாமித்துவம் 4. விபவம் 5. அர்ச்சாவதாரம்.*

386. அர்ச்சாவதார சாமான்யத்திலே மண்டிக்கிடக்கும் ஆழ்வார் யார் ?

*திருமங்கை மன்னன்.*

387. நம்பாடுவான் சரித்திரம் நிகழ்ந்த ஸ்தலம் எது ?

*திருக்குறுங்குடி.*

388. 'முசலகிசலயம்' என்ற வார்த்தை யாருடைய வரலாற்றில் சம்பந்தப்பட்டது ? அதன் பொருள் யாது ?

*வாதிகேசரி அழகிய மணவாளஜீயர்.*

*பொருள் : உலக்கைக் கொழுந்து*

389. கோயில் கந்தாடை நாயனால் இயற்றப்பட்ட நூல் எது ?

*பெரிய திருமுடி அடைவு.*

390. பட்டர் வாதில் வென்ற வேதாந்தி பெயர் என்ன ?

*நஞ்சீயர்.*

391. பட்டர் திருக்கோட்டியூரில் வாழ்ந்த காலத்தில் அவருடன் வாழ்ந்த முக்கிய சிஷ்யர்கள் இருவர் யார் ?

*தெற்காழ்வான், கோளரியாழ்வான்.*

392. பெரியநம்பிகள் ராமானுஜரை சிஷ்யராக ஏற்றருளிய ஊர் எது ?

*மதுராந்தகம்.*

393. பஞ்சமோபாயநிஷ்டையை உடையவருக்கு அருளிச்செய்தவர் யார் ?

*திருவரங்கப்பெருமாள் அரையர்.*

394. யஜ்ஞமூர்த்திக்கு எம்பெருமானார் சூட்டிய திருநாமம் எது ?

*அருளாளப்பெருமாள் எம்பெருமானார்.*

395. ராமானுஜர் யாருடைய அவதாரம் ?

*ஆதிசேஷன்.*

396. ஆதிசேஷனின் மற்றொரு பெயர் என்ன ?

*திருவனந்தாழ்வான்.*

397. தற்போது அரையர்கள் சேவை நடக்கும் திவ்ய தேசங்கள் யாவை ?

*ஸ்ரீரங்கம், ஸ்ரீவில்லிபுத்தூர், ஆழ்வார் திருநகரி, திருக்குறுங்குடி, திருநாராயணபுரம்.*

398. கம்சன் யார் ?

*கண்ணனின் தாய்மாமன்.*

399. ஆசார்யர்களுடைய வியாக்கியானங்கள் பொதுவாக எந்த நடையில் அமைந்துள்ளன ?

*மணிப்பிரவாள நடை (வடமொழியும் தமிழும் கலந்தது).*

400. பகவத்விஷய காலக்ஷேபம் என்று எதைக் கூறுகிறோம் ?

*திருவாய்மொழி காலக்ஷேபம்.*

401. கருடவாஹன பண்டிதர் இயற்றிய நூல் எது ?

*திவ்ய ஸூரி சரிதம்.*

402. யதீந்திரப்ரவண பிரபாவம், ராமானுஜார்ய திவ்யசரிதை ஆகிய நூல்களை இயற்றியவர் யார் ?

*பிள்ளைலோகஞ்சீயர்.*

403. திவ்யதேசங்களில் எத்தனை பூலோகத்தில் உள்ளன ?

*106.*

404. ஸப்தப்ரகாரம் கொண்ட திவ்யதேசம் எது ?

*ஸ்ரீரங்கம்.*

405. ஜடாயுவுக்கு வேறு பெயர் என்ன ?

*பெரியவுடையார்.*

406. திருவடி என்று அழைக்கப்படுபவர் யார் ?

*ஹனுமான்.*

407. வ்யாபக மந்திரங்கள் எத்தனை ? அவை யாவை ?

*மூன்று. அவை நாராயண, வாசுதேவ, விஷ்ணு மந்திரங்கள்.*

408. பகவானை அடைய உபாயங்களுக்குள்ளே எளிமையானது எது ?

*சரணாகதி (அவன் திருவடிகளே வழி).*

409. திருமந்திரம் எத்தனை பதங்களாக உள்ளது ?

*மூன்று.*

410. கருடாழ்வாருக்குப் பெரியதிருவடி என்ற பெயர் எதனால் ஏற்பட்டது ?

*நித்யசூரியான அவர் அனுமனுக்கும் முற்பட்டவர் ஆனதால்.*

411. முமுக்ஷுப்படி என்கிற நூல் எவற்றை விவரிக்கிறது ?

*திருமந்திரம், த்வயம், ச்ரமச்லோகம்.*

412. அருளிச்செயலின் சாரம் எது ?

*திருவாய்மொழி.*

413. எம்பெருமான் பகவத்ஸன்னதியின் வாசற்கதவைத் திறப்பதை ஸ்ரீ வைஷ்ணவர்கள் எப்படிச் சொல்ல வேண்டும் ?

*திருக்காப்பு நீக்குதல் என்று சொல்ல வேண்டும்.*

414. கோயிலாழ்வார் என்றால் என்ன ?

*நம்முடைய அகங்களில் அர்ச்சை வடிவிலும் சாளக்ராம வடிவிலும் பெருமாள்களை எழுந்தருளப் பண்ணியுள்ள பெட்டிக்குக் கோயிலாழ்வார் என்று பெயர்.*

415. பெருமாளுக்கும், ஆசார்யர்களுக்கும் விசிறி வீசும் கைங்கர்யத்தை எவ்வாறு கூற வேண்டும் ?

*திருவாலவட்ட கைங்கர்யம் என்று கூற வேண்டும்.*

416. ஸம்பிரதாயத்தில் நம்மை எவ்வாறு கூறிக்கொள்ள வேண்டும் ?

*அடியேன்.*

417. நம்முடைய அகங்களை ஸம்பிரதாயத்தில் எவ்வாறு கூற வேண்டும் ?

*அடியேன் குடிசை.*

418. பெரியவர்கள் குளித்துக் கொண்டிருப்பதை ஸம்பிரதாயத்தில் எவ்வாறு கூற வேண்டும் ?

*ஸ்வாமி நீராட்டம் கண்டருளுகிறார்.*

419. பெரியவர்களை உணவு உட்கொள்ள அழைக்கும்போது ஸம்பிரதாயத்தில் எவ்வாறு அழைக்க வேண்டும் ?

*தேவரீர் அமுது செய்ய எழுந்தருள வேண்டும்.*

420. அர்த்த பஞ்சகத்தைக் கூறும் திருவாய்மொழித்தனியனின் தொடக்கம் எது ?

*மிக்க இறைநிலை.*

421. பஞ்சஸ்தவங்கள் யாவை ?

*வரதராஜஸ்தவம், ஸ்ரீஸ்தவம், அதிமானுஷஸ்தவம், சுந்தரபாஹுஸ்தவம், ஸ்ரீவைகுண்டஸ்தவம்.*

422. அஷ்டச்லோகீ என்னும் நூலை இயற்றியவர் யார் ?

*ஸ்ரீ பராசரபட்டர்.*

423. துவாபர யுகத்தில் அவதரித்த ஆழ்வார்கள் யாவர் ?

*பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசைப்பிரான், மதுரகவிகள்.*

424. திருக்குளந்தை என்னும் திவ்ய தேசத்தின் மறுபெயர் என்ன ?

*பெருங்குளம்.*

425. நம்பெருமாள் என்று யாரை அழைக்கிறோம் ?

*ஸ்ரீரங்கநாதர் (உற்சவமூர்த்தி).*

426. அழகிய மணவாளன் என்று எந்த பெருமாளை அழைக்கிறோம் ?

*ஸ்ரீ ரங்கநாதர்.*

427. ஸ்ரீரங்கத்தின் ஸ்தல விருக்ஷம் எது ?

*புன்னை மரம்.*

428. பூலோக வைகுண்டம் எது ?

*ஸ்ரீரங்கம்.*

429. கம்பராமாயண அரங்கேற்றம் எங்கு நடந்தது ?

*ஸ்ரீரங்கம் ரங்கநாதர் கோயிலில்.*

430. கம்பராமாயணத்தை ஆமோதித்தவர் யார் ?

*மேட்டு அழகிய சிங்கர்.*

431. திருக்காழிச்சீராம விண்ணகரத்தின் மறு பெயர் என்ன ?

*சீர்காழி.*

432. ஜடாயுவுக்கு இறுதிச்சடங்குகளை செய்தவர் யார் ?

*ஸ்ரீராமர்.*

433. ராமாயணத்தில் மாயமானாக வந்தவன் யார் ?

*மாரீசன்.*

434. வாயுகுமாரர் யார் ?

*ஹனுமான்.*

435. ஸம்பிரதாயத்தில் சிறிய திருவடி என்று அழைக்கப்படுபவர் யார் ?

*ஹனுமான்.*

436. ஆதிசேஷன் பெருமாளுக்கு அண்ணனாக அவதரித்த அவதாரம் எது ?

*பலராமன்.*

437. ஆதிசேஷன் பெருமாளுக்குத் தம்பியாக அவதரித்த அவதாரம் எது ?

*லக்ஷ்மணன்.*

438. ராமர் ஒரே அம்பினால் எத்தனை மரங்களை வீழ்த்தினார் ?

*ஏழு மரங்களை.*

439. சுதாமா யாருடைய நண்பர் ?

*கண்ணன்.*

440. பிரம்மாவின் தலையைக் கிள்ளியதால் சிவனுக்கு வந்த தோஷம் எது ?

*பிரம்ம ஹத்தி தோஷம்.*

441. கண்ணன் அவதரித்த மாதம், நக்ஷத்திரம் எது ?

*ஆவணி, ரோஹிணி.*

442. ஸ்ரீபெரும்புதூரின் மறுபெயர் என்ன ?

*பூதபுரி.*

443. தேவர்கள் கூடிய இடம் எது ?

*திருக்கோட்டியூர்.*

444. கண்ணன் வதம் செய்த யானையின் பெயர் என்ன ?

*குவலயாபீடம்.*

445. 4 புருஷார்த்தங்களைக் கூறுக ?

*தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம்.*

446. மஹாபாரதத்தில் 'பிதாமஹர்' யார் ?

*பீஷ்மர்.*

447. பார்த்தன் பள்ளிப்பெருமாள் பெயர் என்ன ?

*பார்த்தசாரதி.*

448. பாண்டிய நாட்டு திவ்ய தேசங்கள் எத்தனை ?

*பதினெட்டு.*

449. சோழநாட்டு திவ்ய தேசங்கள் எத்தனை ?

*நாற்பது.*

450. ஆழ்வார் திருநகரியில் நான்கு உற்சவங்களும் தொடர்ந்து எந்தெந்த மாதங்களில் நடக்கின்றன ?

*மாசி, வைகாசி - ஆழ்வார்.*

*பங்குனி, சித்திரை - பெருமாள்.*

451. விபூதிகள் எத்தனை ?

*நித்ய விபூதி, லீலா விபூதி ஆகிய இரண்டு.*

452. புராணங்களுக்குள்ளே சிறந்தது எது ?

*விஷ்ணு புராணம்.*

453. புராணங்கள் எத்தனை ?

*பதினெட்டு.*

454. ஆழ்வார் திருநகரியின் பெருமாள் பெயர் என்ன ?

*ஆதிநாதர்.*

455. வேதத்தில் சிறந்த பகுதி எது ?

*புருஷஸூக்தம்.*

456. தர்மசாஸ்திரங்களில் சிறந்தது எது ?

*மனுதர்மசாஸ்திரம்.*

457. மஹாபாரதத்தில் சிறந்த பகுதிகள் எவை ?

*பகவத் கீதை, விஷ்ணு ஸஹஸ்ரநாமம்.*

458. திருக்கண்ணபுரம் பெருமாள் பெயர் என்ன ?

*சௌரிராஜப்பெருமாள்.*

459. பரமபதத்தில் எந்தெந்த ஜீவர்கள் இருப்பார்கள் ?

*நித்யர்களும், முக்தர்களும்.*

460. ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவருக்கும், பஞ்சஸம்ஸ்கார காலத்தில் ஆசார்யனாலே சிஷ்யனுக்கு எந்தெந்த ரஹஸ்ய மந்திரங்கள் உபதேசிக்கப்படுகின்றன ?

*ரஹஸ்யத்ரயம் என்னும் திருமந்திரம், த்வயம், சரமச்லோகம் ஆகியவை.*

461. ரஹஸ்யத்ரயத்தில் அஷ்டாக்ஷரமந்திரம் எது ?

*திருமந்திரம்.*

462. தென் நாடும், வடநாடும் தொழும் திருத்தலம் எது ?

*திருவரங்கம்.*

463. விண்ணோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு எது ?

*திருவேங்கடம்.*

464. எந்த ஊர் நாலாயிரகோஷ்டியில் உபதேச ரத்தின மாலையை நாலாயிரத்தின் ஒரு பகுதியாகவே கருதி சேவித்து வருகிறார்கள் ?

*காஞ்சீபுரம் தேவப்பெருமாள் ஸன்னிதியில்.*

465. திவ்ய தேசங்களில் நேபாள நாட்டில் உள்ள திவ்யதேசம் எது ?

*சாளக்கிராமம்.*

466. "ஒப்பிலா மாதர்கள் வாழும் திவ்ய தேசம்" என்று திருமங்கையாழ்வார் எதைக் குறிப்பிடுகிறார் ?

*திருவல்லிக்கேணி.*

467. நம்பெருமாள் ரத்னாங்கியை எந்த நாளில் சாற்றிக் கொள்கிறார் ?

*வைகுண்ட ஏகாதசி என்னும் பெரிய திருநாளில்.*

468. புராணரத்தினமான ஸ்ரீவிஷ்ணு புராணத்தை இயற்றியவர் யார் ?

*பராசரர்.*

469. ஐந்தாவது வேதம் என்று எதைக் குறிப்பிடுகிறோம் ?

*மஹாபாரதம்.*

470. வியாசர் யாருடைய அம்சமாய் அவதரித்தார் ?

*விஷ்ணு.*

471. வராஹசரமச்லோகத்தை அருளியவர் யார் ?

*ஸ்ரீவராஹப்பெருமாள்.*

472. ஸ்ரீராமசரமச்லோகத்தை அருளியவர் யார் ?

*ஸ்ரீராமர்.*

473. கீதாசரமச்லோகத்தை அருளியவர் யார் ?

*பகவான் ஸ்ரீகிருஷ்ணர்.*

474. பகவான் திருமந்திரத்தை யாருக்கு உபதேசித்தான் ?

*தன் அம்ச பூதனான நரனுக்கு.*

475. பகவான் த்வய மந்திரத்தை யாருக்கு உபதேசித்தான் ?

*தன் துணைவியான ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு.*

476. பகவான் சரமச்லோகத்தை யாருக்கு உபதேசித்தான் ?

*தன்னை ஆச்ரயித்தவனான அர்ஜுனனுக்கு.*

477. மதத்திரயங்கள் என்பவை யாவை ?

*அத்வைதம், த்வைதம், விசிஷ்டாத்வைதம்.*

478. விசிஷ்டாத்வைத மதத்திற்கு நம்பெருமாள் இட்ட பெயர் என்ன ?

*எம்பெருமானார் தரிசனம்.*

479. நித்யசூரிகள் சிலரைக் கூறுக.

*திருவநந்தாழ்வான், கருடாழ்வான், விஷ்வக்சேநர்.*

480. பிரம்மாவின் மானஸ புத்திரர்கள் யாவர் ?

*ஸநகாதியர்.*

481. யுகங்கள் யாவை ?

*கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம்.*

482. பகவந் மந்திரங்களில் இரண்டு வகை எவை ?

*வியாபகமந்திரங்கள், அவ்வியாபக மந்திரங்கள்.*

483. நம்பெருமாளை எத்தனை ஆழ்வார்கள் பாடியுள்ளனர் ?

*பத்து ஆழ்வார்களும், ஆண்டாளும் பாடியுள்ளார்கள்.*

484. நாலு அரசுகள் யாவை ?

*1. தெய்வங்களுக்கு அரசு - நாராயணன்*

*2. ஆலி நாட்டரசு - திருமங்கையாழ்வார்*

*3. மந்திரங்களுக்கு அரசு - திருமந்திரம்*

*4. மரங்களுக்கு அரசு - அரசமரம்*

485. வேதத்தின் அங்கங்கள் யாவை ?

*1. சிக்ஷா 2. வியாகரணம் 3. சந்தஸ்*

*4. நிருக்தம் 5. ஜோதிஷம் 6. கல்பம்*

486. நான்கு வேதங்கள் யாவை ?

*ருக், யஜுர், ஸாம, அதர்வண வேதங்கள்.*

487. வசிஷ்டரின் மகன் யார் ?

*சக்தி.*

488. சக்தியின் திருக்குமாரர் யார் ?

*பராசரர்.*

489. பராசரரின் திருக்குமாரர் யார் ?

*வியாசர்.*

490. வியாசரின் திருக்குமாரர் யார் ?

*சுகப்பிரம்மம்.*

491. மஹாபாரதத்தை இயற்றியவர் யார் ?

*வியாசர்.*

492. மஹாபாரதத்தை ஜனமேஜயனுக்கு யார் உபதேசித்தார் ?

*வைசம்பாயநர்.*

493. வைணவ ஸம்பிரதாயத்தில், 'பெரிய கோவில்' எது ?

*ஸ்ரீரங்கம்.*

494. பெரிய பிராட்டியார் யார் ?

*ஸ்ரீரங்கநாச்சியார்.*

495. பெரிய பெருமாள் யார் ?

*ஸ்ரீரங்கநாதன்.*

496. யசோதையின் பாவனையில் பாசுரங்கள் அமைத்த ஆழ்வார்கள் யாவர் ?

*பெரியாழ்வார், திருமங்கையாழ்வார்.*

497. தேவகி, தசரதன் அவர்கள் நிலையில் நின்று பாடிய ஆழ்வார் யார் ?

*குலசேகரப்பெருமாள்.*

498. ஆயர் குலச் சிறுமியர் பாவனையில் பாசுரங்கள் இயற்றிய ஆழ்வார்கள் யாவர் ?

*பெரியாழ்வார், ஆண்டாள், நம்மாழ்வார், குலசேகரர், திருமங்கை மன்னன்.*

499. திருமங்கை மன்னன் திருவரங்கத்தில் செய்த கைங்கர்யங்கள் எவை ?

*காவிரிக்கரையில் திருத்துறை ஏற்படுத்தியமை. திருமதில் எடுத்தமை, திருஅத்யயநஉத்ஸவம் நடத்தியமை.*

500. தென்திருப்பேரையில் கருடன் சன்னதி விலகியிருப்பதேன் ?

*அத்திருப்பதிப் பாசுரத்தில் நம்மாழ்வார் விவரித்துள்ளவாறு சிறுவர்கள் விளையாட்டை எம்பெருமான் பார்த்து மகிழ்வதற்காக.*

# திருப்பல்லாண்டு

501. திருப்பல்லாண்டு சேவிக்கும் பக்தர்கள் எந்த மந்திரத்தை மனத்திலிருத்த வேண்டும் எனப் பெரியாழ்வார் பணிக்கிறார்?

'ஓம் நமோ நாராயணாய' என்கிற திருவஷ்டாக்ஷர மந்திரம்

502. பல்லாண்டு பாடும் அடியவர்கள் எந்த குலத்தவர்கள் எனக் கருதப்படுவர் ?

தொண்டர் குலம் அல்லது திருமாலடியார் குழாம்

503. பெரியாழ்வார் பகவத் கைங்கர்யம் பண்ணுபவர்கள் மேன்மையை எங்ஙனம் விளக்குகிறார் ?

ஏழு தலைமுறையாக, தப்பாமல் வந்து ''பகவத் கைங்கர்யத்தில் ஈடுபடுகிறவர்கள்'' என்று பெரியாழ்வார் குறிப்பிடுகிறார்.

504. நாகப்பகைக்கொடியான் என்பதன் விளக்கம் யாது ?

பாம்புக்கு விரோதியான கருடனைக் கொடியாக உடைய எம்பெருமான் என்பதாகும்.

505. பல்லாண்டு சேவிப்பவர்கள் ஆசையுடன் மேற்கொள்ள வேண்டிய கடமை யாது ?

சங்கு சக்கரங்களாலே ஆச்சார்யன் மூலம் திருவிலச்சினை செய்து கொள்வது (சமாச்ரயணம்) பல்லாண்டு சேவிப்பவர்கள் மேற்கொள்ளத்தக்க நல்ல உபாயமாகும்.

506. அத்தாணிச் சேவகம் என்று குறிப்பிடப்படுவது யாது ?

எம்பொருமான் இருக்குமிடத்தில் கூடவேயிருந்து கொண்டு பிரியாமல் நின்று செய்கிற கைங்கர்யம் அத்தாணிச் சேவகம் எனப்படும்.

507. அடியோங்கள் நல்லகதியைப் பெற்று 'உய்ந்த நாள்' என்று பெரியாழ்வார் கருதுவது எந்த நாளை ?

நாம், ஸ்ரீமந் நாராயணனுக்கே அடிமைப்பட்டவர்கள் என்று அறிந்து கொண்டு அதை வாக்கினால் வெளிப்படுத்திய நாள் உய்ந்த நாள் ஆகும் எனப் பெரியாழ்வார் கருதுகிறார்.

508. திருப்பல்லாண்டு பிரபந்தத்தில் எம்பெருமானுடன் மங்களாசாஸனம் பெறும் திவ்ய ஆயுதங்கள் எவை ?

சுடராழி, பாஞ்சசன்னியம், சார்ங்கம் என்னும் வில்.

509. திருப்பல்லாண்டு பிரபந்தத்தில் குறிக்கப்படும் ஒரு திவ்ய ஆசார்யர் யார் ?

திருக்கோட்டியூர் செவநம்பி.

510. திருப்பல்லாண்டை ஸதா அநுஸந்திப்பதால் மறுமையில் கிடைக்கும் பயன் யாது ?

மறுமையிலும் பரமபதத்தில் பரமாத்மாவினுடைய பக்கத்தில் இருந்துகொண்டு பல்லாண்டு சேவிக்கும் பேறு (பெருமை) கிட்டும் எனப் பெரியாழ்வார் பலசுருதியில் வெளியிடுகிறார்.

511. எம்பெருமானுக்குத் திருப்பல்லாண்டு பாட, பெரியாழ்வாரைத் தூண்டிய உணர்வு யாது ?

எம்பெருமானுக்குக் கண்ணெச்சில் வரலாகாது என்கிற பொங்கும் பரிவு.

## திருப்பள்ளியெழுச்சி

512. திருப்பள்ளியெழுச்சி பிரபந்தப் பாடல்கள்எந்த பெருமானைத் துயில் எழுப்புவனவாக அமைந்துள்ளன ?

ஸ்ரீரங்கத்தில் பள்ளிக்கொண்டுள்ள ஸ்ரீரங்கநாதனை.

513. "அழுங்கிய யானையின் அருந்துயர் கெடுத்த" நிகழ்ச்சி யாது?

கஜேந்திரமோக்ஷம்.

514. திருப்பள்ளியெழுச்சிக் காலத்தில் எம்பெருமானை ஸேவிக்கத் திரண்டுள்ளவர்களாக ஆழ்வாரால் குறிப்பிடப்படுபவர் யாவர் ?

இந்திரன் உள்ளிட்ட தேவர்கள், மஹாதபஸ்விகள், மஹரிஷிகள், பன்னிரண்டு ஆதித்யர்கள், பதினோரு ருத்ரர்கள், மயில் வாகனன், கந்தர்வர்கள், வித்யாதரர்கள் ஆகியோர் திரண்டு வந்துள்ளதாக ஆழ்வார் குறிப்பிடுகிறார்.

515. வானவர் பெருமானுக்குத் திருப்பள்ளியெழுச்சிக் காலத்தில் சமர்ப்பிக்க கொண்டு வந்துள்ள உபகரணங்கள் யாவை ?

பரிமளம் மிகுந்த புஷ்பங்கள், சங்கநிதி, பத்மநிதி, காமதேனு, ஒளி பொருந்திய கண்ணாடி ஆகியவற்றை கொண்டு வந்துள்ளனர்.

516. உதய நேரத்தில் எதன் ஒளி சுருங்கி காணப்படும் ?

நக்ஷத்திரங்கள், சந்திரன்.

517. விடியற்காலையில் ஆயர்கள் மேற்கொள்ளும் பணி யாது ?

இடையர்கள் விடியற்காலையில் கறவைகளை (பசு, எருமை) கட்டவிழ்த்து புல் மேய அனுப்புவர்.

518. மாமுனி வேள்வியைக் காத்த நிகழ்ச்சி யாது ?

ராமர் விசுவாமித்திரருடைய யாகத்தை காக்க அரக்கர்களை அழித்தமை.

519. திருப்பள்ளியெழுச்சியில் இலங்கையர்கோன் என விளிக்கப்படுபவர் யார் ?

விபீஷணாழ்வான்.

520. திருப்பள்ளியெழுச்சியில் கீதங்கள் பாடுபவர்கள் யார் யார் ? பயன்படுத்தும் இசைக்கருவிகள் என்ன ?

தும்புரு, நாரதர் மற்றும் கின்னரர், யக்ஷர்கள், கருடர்கள், கந்தர்வர்கள் ஆகியோர், யாழ், குழல், மத்தளம் ஆகிய இசைக்கருவிகளைக் கொண்டு கீதங்கள் பாடுகின்றனர்.

521. திருப்பள்ளியெழுச்சி காலத்தில் தொண்டரடிப்பொடியாழ்வார் பெருமானிடம் செய்யும் விண்ணப்பம் யாது ?

தம்மைத் திருமால் அடியார்களுக்கு ஏவல் புரியும் பணிக்கு உட்படுத்துமாறு தொண்டரடிப்பொடியாழ்வார் பெருமானை நோக்கிப் ப்ரார்த்திக்கிறார்.

522. தொண்டரடிப் பொடியாழ்வார் தான் எப்படி சேவை சாதிப்பதாகக் கூறுகிறார் ?

"தொடையொத்த துளவமும் கூடையும் பொலிந்து
தோன்றிய தோள் தொண்ட ரடிப்பொடி யென்னும்
அடியன்

# அவதாரம்

523. அவதாரம் என்ற சொல்லின் பொருள் யாது ?

பகவான் தன் பரத்வ (மேன்மை)- நிலையை விட்டு இறங்கி வந்து மற்றவர் (வை) களோடு கலந்து பரிமாற எடுக்கும் தோற்றம்.

524. பகவானின் முதல் அவதாரம் எது ?

பிரம்மன், சிவன் இவர்கள் நடுவில் காக்கும் கடவுளாக விஷ்ணு என்ற பெயர் கொண்டு எடுத்தது முதல் அவதாரம்.

525. பகவானின் அவதாரங்கள் எத்தனை ?

எண்ணிலடங்காதவை. (பிரமாணம் : சூழல் பலபல வல்லான்(நம்). விஷ்வக்ஸேன ஸம்ஹிதப்படி சுமார் முப்பது என்பாருமுண்டு.

526. எம்பெருமானுடைய அவதாரங்களின் நோக்கம் யாது ?

1. நல்லோர்களைக் காத்தல்

2. தீயோர்களைத் ஒறுத்தல் / ஒடுக்குதல்

3. தர்மத்தை நிலைநிறுத்துதல்.

527. அவதாரம் என்ற உடனேயே எம்பெருமானின் எந்த குணம் வெளிப்படுகிறது ?

சௌசீல்யம் - உயர்ந்தவன் தாழ்ந்தவர்களோடு தன் ஏற்றத்தையும் அவர்கள் தாழ்ச்சியையும் பாராமல் ஒரு நீராக கலத்தல்.

528. எம்பெருமானின் அவதார காலத்தில் அவனுடைய திருமேனி நம்முடைய உடலைப் போன்றதா ?

இல்லை. பரமபதத்தில் உள்ளது போல் ('அப்ராக்ருதமான') சுத்த சத்வ மயமான திருமேனியோடே அவதரிக்கிறான்.

பிர : ஆதியம் சோதி உருவை அங்கு வைத்து இங்கு பிறந்த (நம்)

529. நாம் பாவ புண்ணியங்களின் காரணமாக பிறப்பதுபோல் எம்பெருமான் அவதரிக்கிறானா ?

இல்லை. தன் இச்சையினாலேயும், கருணையாலும் அவதரிக்கிறான்.

530. எம்பெருமான் அவதரிக்கும் காலம் எது ?

தர்மத்திற்கு வாட்டம் ஏற்படும் போதும், அதர்மத்திற்கு ஏற்றம் ஏற்படும் போதும் அவதரிக்கிறான்.

531. எம்பெருமானின் அவதாரம் யார் யாருக்கு இனியவையாய் இருக்கிறது ?

ஆழ்வார்கள் போன்ற அடியவர்க்கும், 'ஏன் அவனுக்குமே கூட' இனியவையாக உள்ளது. (பிர : கீதை)

532. தசாவதாரங்கள் என்றால் என்ன ? அவைகள் எவை ?

எம்பெருமானின் அவதாரங்களுள் ஒரு 'பத்தினை' எடுத்து 'தசாவதாரம்' எனப்படுகிறது. அவை மத்ஸ்ய, கூர்ம, வராஹ நரசிம்ஹ, வாமன, பரசுராம, இராம, பலராம, கிருஷ்ண, கல்கி எனப்படுகின்றன.

533. பாகவதத்தில் எம்பெருமானின் எத்தனை அவதாரங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன ?

24

534. கிருத யுகத்தில் எம்பெருமான் எடுத்த அவதாரங்கள் எத்தனை ? அவை யாவை ?

5 - மச்சாவதாரம், கூர்மவதாரம், வராஹவதாரம், நரசிம்ம அவதாரம், வாமன அவதாரம்.

535. திரேதா யுகத்தில் எம்பெருமான் எடுத்த அவதாரங்கள் எத்தனை? அவைகள் யாவை ?

2 - பரசுராமன், ஸ்ரீ ராமன்.

536. துவாபார யுகத்தில் எம்பெருமான் எடுத்த அவதாரங்கள் எத்தனை ? அவை யாவை ?

2 - பலராமர், கிருஷ்ணர்.

537. கலியுகத்தில் எம்பெருமானின் அவதாரம் என்ன ?

கல்கி அவதாரம்

## மத்ஸ்யாவதாரம்

538. தசாவதாரத்தில் முதல் அவதாரம் யாது ?

மத்ஸ்யாவதாரம்.

539. மத்ஸ்யாவதாரம் எம்பெருமான் எடுக்கக் காரணமாயிருந்த அசுரன் யார் ?

ஹயக்ரீவன்

540. ஹயக்ரீவன் எங்கிருந்து தோன்றினான் ?

பிரம்மனின் முகத்திலிருந்து

541. ஹயக்ரீவனின் மற்றொரு பெயர் என்ன ?

சோமகன்.

542. ஹயக்ரீவன் செய்த தவறு என்ன ?

பிரம்மனிடம் இருந்த வேதங்களை அபகரித்துக் கொண்டு சென்று விட்டான்.

543. ஹயக்ரீவனை ஒடுக்குவதற்கு எம்பெருமான் எடுத்த உருவம் யாது ?

மீன். (மத்ஸ்யம்)

544. மீனாக வந்த எம்பெருமான் யாருடைய கையில் கிடைத்தான்?

ஸத்ய.வ்ரதன் எனும் ராஜரிஷியிடம்

545. அவன் (ஸத்யவ்ரதன்) எங்கு தவம் மேற்கொண்டிருந்தான் ?

க்ருதமாலா நதியின் கரையில்.

546. தன் கையில் கிடைத்த மீனை ஸத்யவ்ரதன் எங்கு சேர்த்தான் ?

தன் கமண்டலத்திற்குள் சேர்த்துக்கொண்டான்.

547. மீன் என்னவாயிற்று ?

(க்ஷணத்திற்கு க்ஷணம்) பெரிதாக வளர்ந்து கொண்டே வந்தது.

548. எவ்வளவு பெரியதாக மீன் வளர்ந்தது ?

100 யோஜனை நீளமும் அதற்குத் தக்க பருமனாகவும் வளர்ந்தது.

549. கடைசியில் அந்த மீன் எங்கு கொண்டு விடப்பட்டது ?

சமுத்திரத்தில்.

550. கடலில் கொண்டுவிட்ட எத்தனை நாட்களுக்குள் உலகம் (ஜகத்) மூழ்கியது ?

7 நாட்களுக்குள்.

551. அந்த பிரளய நீரில் வந்த படகில் யார் யார் இருந்தனர் ?

சப்த ரிஷிகளும் சத்ய விரதனும் தாவரங்களும், மற்றும் பல பிராணிகளும் இருந்தன.

552. பெருங்காற்றினால் ஓடம் அலைந்த போது அதனை எங்கு கட்டி வைத்தார்கள் ?

மீனின் தலையில் முளைத்த கொம்பில்.

553. எதனால் கட்டினார்கள் ?

ஓர் நீண்ட பாம்பினால்

554. ஓடம் மீனின் கொம்பில் கட்டப் பட்ட போது அந்த 'மீன்' எவ்வளவு பெரியதாய் இருந்தது ?

லக்ஷம் யோஜனை நீளம், பத்தாயிரம் யோஜனை பருமன்.

555. பின்பு அந்த மீன் செய்தது என்ன ?

கட்டப்பட்ட படகைத் தாங்கிக் கொண்டு துள்ளி விளையாடி, அசுரன் கவர்ந்து சென்ற வேதத்தை மீட்டு நல்லோர்களை காத்தது.

556. மச்சாவதாரம் கூறும் ஓர் திவ்ய பிரபந்த பாசுரத்தை கூறுக.

"கொழுங்கயலாய் நெடுவெள்ளம் கொண்ட காலம்." (பெரிய திருமொழி 6-6-2)

557. தசாவதாரத்தையும், திருமங்கையாழ்வார் குறிப்பிடும் பாசுரம் எது ?

மீனோடாமை .............கற்கியுமானான் தன்னை - 8-8-10 பெரிய திருமொழி

## கூர்மாவதாரம்

558 திருமகளைப் புகழ்ந்து பாடிப் பிரசாதத்தைப் பெற்ற பெண்பிள்ளை யார் ?

ஒரு வித்யாதரப் பெண் பிள்ளை.

559. அவள் திருமகளை எங்கு புகழ்ந்து பாடினாள் ?

விஷ்ணு லோகத்தில்

560. அவள் மீண்டு வருகையில் அவளை வணங்கியவர் யார் ?

துர்வாச முனிவர்.

561. அம்முனிவருக்கு அந்தப் பெண் பிள்ளை என்ன அளித்தாள்?

தான் திருமகளிடமிருந்து பெற்ற மாலையை .

562. துர்வாசர் அந்த மாலைப் பிரசாதத்தை யாருக்கு அளித்தார்?

தேவேந்திரனுக்கு

563. இந்திரன் அந்த மாலையை என்ன செய்தான் ?

தன் யானையின் பிடரியில் வைத்தான்.

564. இந்திரன் அம்மாலையை துர்வாசரிடமிருந்து எப்படி வாங்கினான் ?

யானை மீது அமர்ந்து கொண்டே அடக்கும் 'ஈட்டி' (அங்குசம்) யினால் வாங்கினான்.

565. அந்த மாலை என்னவாயிற்று ?

இந்திரனின் யானை அதைக் காலடியில் இட்டு மிதித்து விட்டது.

566. அதனால் ஏற்பட்ட விளைவு யாது ?

துர்வாசர் கடும் கோபம் கொண்டு சாபமிட்டார்.

567. துர்வாசர் இட்ட சாபம் யாது ?

'தேவேந்திரனின் குடை மற்றும் செல்வம் கடலுள் ஒளிந்து விடக் கடவது' என்பதாம்.

568. தேவேந்திரனின் நிலை என்னவாயிற்று ?

செல்வம் இழந்ததால் அசுரர்கள் சண்டையிட்டு தேவேந்திரனை வென்றனர்.

569. இழந்த செல்வத்தை மீண்டும் பெற இந்திரன் செய்தது யாது ?

திருமாலை நோக்கிச் சரணடைந்தான்.

570. திருமால் இந்திரனுக்கு இட்ட கட்டளை யாது ?

மந்தர மலையைக் கொண்டு திருப்பாற் கடலைக் கடைந்து அமுதம் எடுக்க வேண்டுமென்பதே.

571. தேவர்கள் திருபாற்கடலைக் கடைய யாரைத் துணைக்கு அழைத்தார்கள் ?

அசுரர்களை.

572. தேவர்களும் அசுரர்களும் எதைக் கயிறாகக் கொண்டு கடலை கடைந்தனர் ?

வாசுகி எனும் பெரும் பாம்பை.

573. தேவர்கள் மற்றும் அசுரர்கள் 'வாசுகியின்' எந்தெந்த பக்கத்தில் பிடித்துக்கொண்டு கடைந்தனர் ?

தேவர்கள் -வால் பக்கம்

அசுரர்கள் - தலைப்பக்கம்

574. கடலைக் கடையும் போது மலை என்னவாயிற்று?

மலை கடலுள் அழுந்த முற்பட்டது.

575. அதனைத் தவிர்க்க, பகவான் என்ன செய்தான் ?

எத்தனை பாரத்தையும் தாங்கக் கூடிய 'ஓட்டினை' யுடைய ஆமையாக வடிவம் எடுத்தான்.

576. எம்பெருமான் 'ஆமையாக' எடுத்த அவதாரத்திற்கு பெயர் என்ன ?

கூர்மாவதாரம்.

577. ஆமையை எதற்கு உவமையாக காட்டுகிறான் கண்ணன் ?

ஐம்புலன்களையும் அடக்கும் ஞானிக்கு உவமையாக காட்டுகிறான். (ஆமை நான்கு கால்கள் - ஒரு தலை - இவற்றை தன் ஓட்டிற்குள் அடக்குவது போல)

578. இதே 'உவமை' யைத் திருவள்ளுவர் எந்தக் குறளில் காட்டுகிறார் ?

'ஒருமையுள் ஆமை போல் ஐந்து அடக்கலாற்றின்

எழுமையும் ஏமாப்புடைத்து.'

579. கடலைக் கடைந்த போது முதலில் கிளர்ந்து எழுந்தது எது ?

ஆலஹால விஷம்

580. விஷம் யாருக்கு அளிக்கப்பட்டது ?

பரமசிவனார்க்கு

581. விஷம் 'கழுத்தில்' தங்கியதால் பரமசிவனார் பெற்ற பெயர் என்ன ?

நீல கண்டன்

## வராஹாவதாரம்

582. வராஹவதாரத்தை விரிவாகக் கூறும் நூல் யாது ?

வராஹபுராணம்

583. வராஹம் என்கிற சொல்லுக்குப் பொருள் யாது ?

பன்றி

584. ஹிரண்யாக்ஷன் யாருடைய ஸஹோதரன் ?

இரண்ய கசிபு

585. ஹிரண்யாக்ஷன், ஹிரண்யக் கசிபு இவர்களின் பெற்றோர் யாவர்?

காஸ்யப முனிவர், திதி

586. அசுரர்களின் வேறுபெயர் என்ன ?

தைத்யர்கள் (திதியின் மக்கள்)

587. ஹிரண்யனும், ஹிரண்யகசிபும் எங்ஙனம் பலத்தை சேர்த்துக் கொண்டனர் ?

பிரம்மாவைக் குறித்து தவம் செய்து வரம் பெற்றார்கள்.

588. ஹிரண்யாக்ஷன் கையில் ஏந்திய ஆயுதம் யாது ?

கதை (Gadha)

589. ஹிரண்யாக்ஷன் யாரைப் போருக்கு அழைத்தான் ?

விபாவரி என்கிற வருணனை.

590. வருணன் ஹிரண்யாக்ஷனுடன் போரிட்டானா ?

அஞ்சினபடியால் போர் செய்ய மறுத்துவிட்டான்

591. ஹிரண்யாக்ஷனைத் திருமாலிடம் போரிடத் தூண்டியது யார்?
வருணன்

592. திருமாலிடம் சண்டையிட ஹிரண்யாக்ஷன் எங்கு செல்ல முற்பட்டான் ?
வைகுண்டம்

593. அவனை அங்குச் செல்லவிடாமல் தடுத்தது யார் ?

நாரதர்.

594. என்ன சொல்லி நாரதர் தடுத்தார் ?

பகவான் வைகுண்டத்தில் இல்லை, பாதாளத்தில் அழுந்தி கிடக்கும் பூமியை வெளிக் கொணர, பாதாள உலகிற்கு சென்றுள்ளார்.

595. பூமி ஏன் பாதாளத்தில் அழுந்திற்று ?

ஹிரண்யாக்ஷன் தன் வலிமையினால், பூமியைப் பாயாக (mat) சுருட்டிக் கடலில் முழுகச்செய்திருந்தான்.

596. பூமியை வெளிக்கொணரத் திருமால் எந்த உருவத்தை எடுத்தார்?

பன்றி (வராஹம்)

597. ஹிரண்யாக்ஷன், வராஹப் பெருமானிடம் சண்டையிட்டானா ? முடிவு என்ன ?

இருவரும் பலவிதமான ஆயுதங்கள் கொண்டு கடுமையாக மோதினர். ஹிரண்யாக்ஷன் மாண்டான்.

598. ஹிரண்யாக்ஷன் அழிவினால் மகிழ்ந்தவர்கள் யார் ?

தேவர்கள்.

599. ஹிரண்யாக்ஷனை அழித்த பின்பு வராஹப் பெருமான் என்ன செய்தார் ?

பூமியை, முன்பிருந்த நிலையில் நிறுத்தினார்.

600. பூமிக்கு அபிமானியானவர் யார் ?

பூமிப்பிராட்டி (பூதேவி)

601. பூமி வெளிவந்தவுடன் பூமிப்பிராட்டி மகிழ்ந்தாரா ?

இல்லை, வருத்தமுற்றாள்.

602. பூமிப்பிராட்டி (பூதேவியின்) வருத்தத்திற்கு காரணம் யாது ?

தன் ஒருத்திக்குக் கிடைத்த வாழ்ச்சி (பலன், உஜ்ஜீவனம்) உலகோருக்குக் கிடைக்கவில்லையே என்று.

603. வராஹப் பெருமானிடம் பூதேவி என்ன வேண்டினார் ?

உமக்கு மாணவியாய், அடிமையாய், பக்தையாய் இருக்கும் என் பொருட்டு உலகனைத்தும் வாழ, சுலபமான உபாயத்தைக் கூறவேண்டும் என வேண்டினார்.

604. வராஹப் பெருமான் கூறிய வழிகள் (உபாயம்) யாவை ?

1. திருநாம ஸங்கீர்த்தனம்
2. புஷ்பார்ச்சனம்
3. சரணாகதி

605. சரணாகதிக்காக, வராஹப் பெருமான் வெளியிட்ட சுலோகங்கள் எத்தனை ? அவை யாவை ?

இரண்டு
1. ஸ்திதே மனஸி........ - என்று ஆரம்பிக்கும் ச்லோகம்
2. ததஸ்தம்......... - என்று ஆரம்பிக்கும் ச்லோகம்

606. பகவானிடம், வழிமுறைகளைக் கேட்ட பூதேவி எதனை முக்கியமாக மேற்கொள்ள ஆசை கொண்டாள் ?

திருநாம ஸங்கீர்த்தனம்

607. திருநாம சங்கீர்த்தனத்தைப் பூமிப்பிராட்டி எவ்வாறு நடைமுறைப் படுத்திக்காட்டினாள் ?

பெரியாழ்வார் திருமகளாக (ஆண்டாள்) அவதரித்து 'திருப்பாவையின்' மூலம் அனுஷ்டித்து காட்டினாள்.

608. திருநாமத்தைப் பாடுவதால் உண்டாகும் பலன்களை பூமிபிராட்டி (ஆண்டாள்) விவரிக்கும் பாசுரம் எது ?

"ஓங்கி ..... உலகளந்த "

609. வராஹப் பெருமான் பூதேவிக்கு கூறிய (திருநாம சங்கீர்த்தனங்கள்) சரித்திரம் எது ?

நம்பாடுவான் சரித்திரம்.

610. வ்ராஹ புராணத்தில் கூறப்படும் நம்பாடுவான் சரித்திரத்திற்கு என்ன பெயர் ?

கைசிக புராணம்.

611. கைசிக புராணத்தை, 'கௌசிக புராணம்' என்று கூறலாமா ? ஏன் ?

கூறலாகாது. கைசிகம் எனும் ராகத்தை (பண்ணினை) அடிப்படையாகக் கொண்டு எழுந்த புராணம் என்பதால் கைசிக புராணம் என்று பெயர்.

612. நம்பாடுவான் சரித்திரம் நடைபெற்ற க்ஷேத்திரம் யாது ?

திருக்குறுங்குடி மலையில்

613. வராஹப் பெருமான் இன்றும் அர்ச்சாமூர்த்தியாக எழுந்தருளி யிருக்கும் ஸ்தலங்கள் சிலவற்றைக் கூறுக.

1) ஸ்ரீ முஷ்ணம் 2) திருமலை (ஸ்வாமி புஷ்கரிணிக் கரையில்) 3) திருவிடவெந்தை 4) திருக்கடல் மல்லையில்.

614. வராஹப் பெருமானுக்கு நம்மாழ்வார் சூட்டும் திருநாமம் யாது ?

ஞானப்பிரான்.

615. வராஹக்ஷேத்ரம் என்று பிரசித்தி பெற்று இருக்கும் ஸ்தலம் யாது ?

திருமலை (திருவேங்கடம்) .

616. திருக்கடல்மல்லையில் வராஹ பெருமான் எங்கு எழுந்தருளியிருக்கிறார் ?

தனிக்கோயிலில் ஞானப்பிரான் என்கிற சந்நிதியில்.

617. வராஹ அவதாரத்தை ஆண்டாள் எங்ஙனம் வினோதமாகக் குறிப்பிடுகிறாள் ?

''மானமிலாப் பன்றியாம் தேசுடைய தேவர்'' நாச்சியார் திருமொழி

618. மானமிலாப் பன்றி என்றால் என்ன ?

a. அபிமானமில்லாத பன்றி
b. உபமானமில்லாத பன்றி

## நரசிம்ம அவதாரம்

619. ஹிரண்யனுக்கு ஏன் கோபம் மூண்டது ?

அளவற்ற வரங்கள் பெற்றிருந்தும், ஹிரண்யன் தம்பி ஹிரண்யாட்சன் திருமாலால் அழிக்கப் பெற்றதால்.

620. ஹிரண்யன் எதற்காகப் பிரமனை நோக்கிக் கடுந்தவம் புரிந்தான்?

திருமாலை எதிர்க்கவும், தன் திறமையை மேலும் வளர்த்துக் கொள்ளவும் கடும்தவம் புரிந்தான்.

621. ஹிரண்யன் பிரம்ம தேவனிடம் கேட்ட வரம் யாது ?

எந்த உயிராலும், பொருளாலும், உள்ளேயோ, வெளியிலேயோ, பகலிலேயோ, இரவிலேயோ, பூமி, ஆகாயம், இவற்றில் மரணம் சம்பவிக்க கூடாது. ஆயுதங்களோ, பிராணிகளோ, மனிதர்களோ, தேவர்களோ, அசுரர்களோ என்னுயிரைப் பிரிக்க கூடாது என்று யாராலும் வெல்ல முடியாத வரத்தை வேண்டினான். பிரம்மனும் அளித்தான்.

622. வரம் பெற்ற ஹிரண்யன் முனிவர்களுக்கு இட்ட கட்டளை யாது ?

தேவர்களுக்கு ஹவிர்ப்பாகம் அளிக்க கூடாது. தனக்கே அளிக்க வேண்டும் என்று கட்டளையிட்டான்.

623. தேவர்கள் திருமாலைச் சரணடைந்த காரணம் என்ன ?

இரணியன் செய்த கொடுமையில் பூமியிலிருந்து அவர்களுக்கு அவிர்ப்பாகம் கிடைக்கவில்லை, எங்களை காப்பாற்றுங்கள் என்று சரண் அடைந்தனர்.

624. தேவர்கள், முனிவர்கள், மக்கள் வாய்களிலிருந்து என்ன வார்த்தை உச்சரிக்கப்படுவதைத் திருமால் கண்டார் ?

'ஓம் நமோ நாராயணாய' என்று பக்தியோடு உச்சரித்த வாய்களிலிருந்து 'ஓம் ஹிரணியாய நம:' என்ற வார்த்தை உதறலோடு உச்சரிக்கப்படுவதைக் கண்டார்.

625. ஹிரண்யனுக்கு எத்தனை பிள்ளைகள் ?

நான்கு பிள்ளைகள்.

626. ஹிரண்யனின் நான்காவது மகன் யார்?

ப்ரஹ்லாதன் .

627. பிரகலாதன் தாயார் பெயர் என்ன ?

கயாது

628. ஸ்ரீமந் நாராயணமூர்த்தியின் நாமத்தை பிரஹலாதனுக்கு கருவிலேயே ஓதி வைத்தவர் யார் ?

நாரதர்.

629. அசுரர்களின் குரு யார் ?

சுக்ராசாரியார்.

630. சுக்ராசாரியார் குமாரர்கள் யாவர் ?

சண்டன், மார்கன்

631. இவர்கள் இருவரும் யாருக்கு கல்வி போதித்து வந்தனர் ?

ஹிரணியன் பிள்ளைகளுக்கும் மற்றவர்களுக்கும் கல்வி போதித்து வந்தனர்.

632. ஆசிரியர் 'ஹிரண்யாய நம:' என்று கூறுமாறு சொன்னபோது பிரகலாதன் கூறியது யாது ?

இறைவனுக்கு அடுத்தபடியாகத் தான் மாதா, பிதா, குரு எல்லாம். எனவே என் இறைவன் நாராயணன் நாமத்தையே கூறுவேன் என்று கூறி ''ஓம் நமோ நாராயணாய'' என்று கூறினான்.

633. ஹிரண்யன் எடுத்த முடிவு என்ன ?

பிரகலாதன் தன்னை ஆண்டவனாக எண்ணிப் போற்றச் செய்தாக வேண்டும் என்று முடிவு செய்தான்.

634. ஹிரண்யன் ஏவலர்களை அழைத்து இட்ட கட்டளை யாது ?

'ஹிரண்யாய நம:' என்று பிரகலாதன் கூற வேண்டும் இல்லையேல் அவனை உயிரை அழித்து விட கட்டளை ஈட்டான்.

635. அரச கட்டளை ஏற்று ஏவலர்கள் பிரகலாதனைக் கொல்ல மேற்கொண்ட முயற்சிகள் யாவை ? திருமாலால் முயற்சிகள் எவ்வாறு முறியடிக்கபட்டன ?

| | | |
|---|---|---|
| 1. | படைக்கலங்களை வீசினர். | அவை தூளாகின. |
| 2. | தீயில் தள்ளினார்கள். | தீநாக்கு தீண்டியபோது மலர்கள் உரசியது போல் இருந்தது. |
| 3. | மதயானையை ஏவி விட்டனர். | வேழம் பிரகலாதன் முன் மண்டியிட்டது. |
| 4. | தந்தங்களால் உடலில் குத்தினர். | தந்தங்கள் உடைந்து போயின. |
| 5. | பெரிய கல்லில் கட்டி கடலில் வீசினர். | கனம் மிகுந்த கல்லுடன் பிரகலாதனும் மிதந்து வந்தான். |
| 6. | கொடிய விஷம் அளிக்கப்பட்டது. | கொடிய விஷமும் அமுதமாக மாறியது. |

636. ஏவலர்கள் இரணியனிடம் பயத்துடன் கூறிய செய்தி யாது ?

எத்தனையோ விதங்களில் முயன்றும் பிரகலாதனைக் கொல்ல முடியாமல் தோற்றுபோனதை வேதனையோடும் பயத்தோடும் கூறினர்.

637. ஏவலர்கள் கூறியதைக் கேட்டு ஹிரணியன் செய்த முடிவு என்ன ?

தானே தன் பிள்ளையைக் கொன்று விடுவது என்று முடிவு செய்தான்.

638. ஹிரண்யன் பிரகலாதனை நோக்கி என்ன வினவினான் ?

உன் இறைவன் யார் ? காட்டு என்று வினவினான்

639. பிரகலாதன் இதற்குக் கூறிய பதில் யாது ?

இறைவன் உன்னிலும் உள்ளான், என்னிலும் உள்ளான்; தூணிலும் இருப்பான் துரும்பிலும் இருப்பான் என்று கூறினான்.

640. ஹிரணியன் தூணை உடைத்ததும் என்ன நடந்தது ?

இடி இடித்ததைப் போன்று பேரொலி கேட்டது. தூணைப் பிளந்துகொண்டு, மனித உடலும், சிங்க முகமும், கூரிய நகங்களும் கொண்டு நரசிங்கராக மண்ணுக்கும் விண்ணுக்கும் நெடுக வளர்ந்து நின்றார் திருமால்.

641. நரசிங்கராகிய திருமால் என்ன செய்தார் ?

அசுரர்களையும், திரண்டு வந்த சேனைகளையும் சின்னாபின்னமாக அழித்தார்.

642. பிரகலாதன் என்ன செய்து கொண்டு இருந்தான் ?

பரந்தாமனின் திருவிளையாடலைப் பார்த்து மகிழ்ந்து கொண்டிருந்தான்.

643. நரசிங்கராகிய திருமால் என்ன செய்தார் ?

ஹிரணியனைத் தன் கைகளால் எட்டிப் பிடித்து வாயிற்படிக்கு இழுத்துச் சென்று தன் மடி மீது போட்டு, கூரிய நகங்களால் மார்பைப் பிளந்து, குடலைப் பிடுங்கி மாலையாகப் போட்டுக் கொண்டார். குருதியைப் பருகினார். சாகாவரம் பெற்ற அசுரனை அழித்தார்.

644. கொடிய அசுரன் அழிந்ததால் விண்ணவரும் மண்ணவரும் என்ன செய்தனர் ?

விண்ணவரும் மண்ணவரும் ஆனந்தக் கூத்தாடினார்கள்.

645. நரசிங்கரின் கோபம் தணியாவிட்டால் என்ன நேரும் என்று தேவர்கள் பயந்தனர் ?

ஜகத்திற்குக் கேடு விளையும் என்று பயந்தனர்.

646. நரசிங்கரின் கோபத்தை சாந்தப்படுத்தியவர் யார் ?

பிரகலாதன்.

647. திருமாலிடம் பிரகலாதன் வேண்டிய வரம் யாது ?

என்றும் மாறா பக்தியுடன் தங்கள் திருநாமத்தை நான் ஜபித்துக் கொண்டேயிருக்க வேண்டும் என்று வேண்டினான்.

648. திருமால் பிரகலாதனுக்குக் கொடுத்த ஆசிர்வாதங்கள் என்ன ?

அசுரர்களுக்கெல்லாம் அறிவுடைய அரசனாக விளங்க வேண்டும். அருள் நெறியைப் பரப்பி வரவேண்டும்.

649. திருமங்கையாழ்வார் நரசிம்மாவதாரத்தைக் குறிப்பிடும் திருவல்லிக்கேணி பாசுரத்தைக் கூறுக.

2-3-8 (பெரிய திருமொழி) பள்ளியில் ஓதி......

650. திருமங்கையாழ்வாரின் ஸ்வீகாரப் பிள்ளை ென்று பெரியவாச்சான் பிள்ளை யாரைக் குறிப்பிடுகிறார் ?

பிரஹ்லாதன்

## வாமன அவதாரம்

651. மஹாபலி யார் ?

பிரஹலாதனின் பேரன்.

652. யாரை வெற்றி கொள்ள அந்த யாகத்தைச் செய்தான் ?

தேவேந்திரனை வெற்றி கொள்ள.

653. பிரகலாதன் தன் பேரனான மாவலிக்கு அளித்தது யாது?

வாடாத தாமரை மலரை.

654. மாவலி மன்னன் எந்தப் பட்டணத்தின் மீது தன் சேனைகளை ஏவினான் ?

அமராவதிப் பட்டணத்தின் மீது ஏவினான்.

655. தேவேந்திரன் யாரைச் சரண் அடைந்தான் ?

வியாழ பகவானைச் சரண் அடைந்தான்.

656. மாவலி இட்ட கட்டளை யாது ?

தேவர்களைப் போற்றகூடாது; பாவ புண்ணியம் பார்க்கக்கூடாது; தன் வாக்கே தேவ வாக்கு என்று கொள்ள வேண்டும் என்று கட்டளை இட்டான்.

657. தேவமாதா யார் ?

அதிதிதேவி.

658. அதிதி தேவியின் கணவர் யார் ?

காச்யப முனிவர்.

659. தேவர்களின் துயரம் நீங்கக் காச்யப முனிவர் அதிதிக்குக் கூறிய விரதம் யாது ?

பயோவிரதம்.

660. விரதத்தின்போது என்ன செய்ய வேண்டும் என்று காசிப முனிவர் கூறினார் ?

பங்குனி மாதத்தில், சுக்கில பட்சத்தில் பன்னிரண்டு நாள்கள் பரந்தாமனை எண்ணிப் பாலை மட்டுமே பருகி பூஜிக்க வேண்டும்.

661. திருமால் அதிதிக்கு கூறியபடி எப்பொழுது மகனாக அவதரித்தார் ?

புரட்டாசி மாதத்தில், சுக்கில பட்சத்தில், சிரவண நட்சத்திரம், துவாதசி திதியில் மகனாக அவதரித்தார்.

662. மாவலி மீண்டும் நடத்திய யாகத்துக்கு யார் யார் சென்றனர் ?

முனிவர்கள் பலரும், வாமனரும் சென்றார்.

663. வாமனர் யாகத்திற்கு எவ்வாறு சென்றார் ?

ஒரு கையில் கமண்டலத்துடன் மான்தோல் போர்த்திச் சென்றார்.

664. குள்ள வாமனர் மாவலியிடம் கேட்ட தானம் என்ன ?

வாமனர் தம் காலடியால் மூன்று அடி நிலம் வேண்டும் என்று கேட்டார்.

665. மாவலி செய்ய வந்த தானத்தை அசுர குரு சுக்கிராச்சாரியார் ஏன் தடுத்தார் ?

''வந்து நிற்கும் வாமனர் திருமாலாக இருப்பாரோ என்று ஐயுறுகிறேன்'' என்று கூறி தடுத்தார்.

666. சுக்ராச்சாரியார் செய்த சூழ்ச்சி யாது ?

தாரை வார்த்துக் கொடுக்கும் கிண்டிப் பாத்திரத்தின் துளையை நீர் வெளியே வராதபடி தான் வண்டு உருவில் தடுத்துக் கொண்டிருந்தார்.

667. சுக்கிராச்சாரியாரின் சூழ்ச்சியை வாமனர் எப்படி வெற்றி கொண்டார் ?

வாமனர் தன் கையிலிருந்த தர்ப்பை புல்லினால் கிண்டியிலிருந்து நீர் வரும் துளையைக் குத்தினார். இதனால் சுக்கிராச்சாரியாரின் கண் ஒன்று பழுதடைந்தது.

668. மாவலி தாரை வார்த்துத் தரும்போது வாமனர் எவ்வுருவத்தில் மூவடியை அளந்தார் ?

வாமனராயிருந்த திருமால் பெரிய உருவம் எடுத்தார். அவ்வுருவத்துடன் பூமியை திருவடியொன்றாலும், வானத்தை இரண்டாம் திருவடியாலும் அளந்தார். மூன்றாவது அடிக்கு இடம் எங்கு உள்ளது என்று கேட்டார்.

669. திருமாலுக்கு மாவலி கூறிய மறுமொழி யாது ?

''நான் சொன்ன சொல் தவறமாட்டேன். உமது மூன்றாவது காலடிக்கு இடம் இதோ'' என்று தன் சிரசைத் தாழ்த்திக் காட்டினான் மாவலி.

670. யாகம் பூர்த்தியானவுடன் மாவலி எங்கு சென்றான் ?

யாகம் முடிந்ததும், தன் முன்னோர் பிரகலாதனோடு சுதல லோகத்துக்குச் சென்று அங்கு ஆட்சி புரிந்தான்.

671. மாவலியிடம் தானமாகப் பெற்ற மூவுலகங்களையும் திருமால் யாரிடம் ஒப்படைத்தார் ?

இந்திரனிடம்.

672. உலகளந்த பெருமாளுக்கு என்ன பெயர் ?

த்ரிவிக்ரமன்

673. வேதத்தில் பல முறை பேசப்பட்ட அவதாரம் எது ?

வாமன, த்ரிவிக்ரம அவதாரம்

674. மஹாபலியைத் திருமங்கையாழ்வார் எப்படிக் குறிப்பிடுகிறார் ?

காமருசீர் அவுணனென்று (விரும்பத்தக்க அசுரன்)

675. திருமங்கையாழ்வார் ஏன் மஹாபலியை கொண்டாடினார் ?

அசுரனாயிருந்த போதும் மஹாபலி வாமனனின் முழு அழகையும் தரிசித்தபடியால்

## பரசுராம அவதாரம்

676. பரசு என்றால் பொருள் என்ன ?

பரசு என்றால் கோடாரி என்று பொருள்.

677. பரசுராமர் என்று எதனால் அழைக்கப் பெற்றார் ?

கோடாரியை ஆயுதமாக கொண்டிருந்த காரணத்தால்.

678. பரசுராமரின் தாய் தந்தை பெயர் என்ன ?

தாய் ரேணுகாதேவி; தந்தை ஜமதக்கினி முனிவர்.

679. பரசுராமர் எத்தனையாவது மகனாக பிறந்தார் ?

ஐந்தாவது மகனாக பிறந்தார்.

680. ஜமதக்கினி முனிவர் தன் பிள்ளைகளுக்கு இட்ட கட்டளை யாது ?

ரேணுகாதேவி செய்த தவறுக்காகப் பிள்ளைகளை அழைத்து அவளைக் கொன்றுவிடுமாறு கட்டளையிட்டார்.

681. பரசுராமரின் தமையன்மார்கள் முனிவரின் கட்டளைக்கு என்ன கூறினர் ?

தம் தாயை கொல்ல அவர்கள் மறுத்து விட்டனர்.

682. பரசுராமர் என்ன செய்தார் ?

பரசுராமர் ''தந்தை சொல் மிக்க மந்திரமில்லை'' என்கிற வாசகத்துக்கு இலக்கணமாக தாயை கொன்று விட்டார்.

683. பரசுராமர் தந்தையிடம் என்ன வரம் வேண்டினார் ?

தன் தாயை மீண்டும் பெறும் வரத்தை அருளுங்கள் என்று கூறினார்.

684. பரசுராமரின் இச்செயல் நமக்கு எதை தெரிவிக்கிறது ?

தாய், தந்தையிடம் தனயன் காட்ட வேண்டிய பாசத்தையும் பரிவையும் அறிவதற்கு உதவுகிறது.

685. பரசுராமரின் கர்வமும் அவதார சக்தியும் எதனால் மறைந்து போனது ?

இராமர் விஷ்ணு தனுசுவை மிக எளிதாக வளைத்து விட்டதால். ''உன் கையிலிருக்கும் அம்புக்கு என் தவத்தின் பயனாக எல்லாம் பலியாக்குகிறேன்'' என்று கூறி அகன்றார்.

686. பரசுராமரின் மாணவன் யார் ?

கர்ணன்.

687. கர்ணன் எந்த உண்மையைக் கூறாமல் பரசுராமரிடம் மாணவராகச் சேர்ந்தான் ?

தான் ஒரு க்ஷத்திரியன் என்ற உண்மையை கூறாமல் அவரிடம் சேர்ந்து வில் வித்தை கற்றான்.

688. கர்ணனுக்குப் பரசுராமர் இட்ட சாபம் என்ன ?

''நயவஞ்சகத்தோடு என்னிடம் கற்ற வித்தை ஆபத்து காலத்தில் அம்புகளை எய்ய உச்சரிக்க வேண்டிய மந்திரங்கள் உனக்கு மறந்து போகும்'' என்று சாபம் கொடுத்தார்.

689. வண்டாக வந்து கர்ணனின் தொடையைத் துளை செய்தவர் யார்?

பாண்டவர் தூதர் பரந்தாமனே (திருமால்).

ஸ்ரீ :

ஸ்ரீமதே ராமானுஜாய நம:

# திருவரங்கம் பெரிய கோயில்

690. கோயில் என்றால் எதைக் குறிக்கும் ஸ்ரீ வைணவ சமயத்தில்?

(ஸ்ரீரங்கம்) திருவரங்கம்

691. பெரிய கோயில் எது ?

திருவரங்கம் திருஅரங்கநாதர் திருக்கோயில்

692. பெருமாள் என்று யாரைக் குறிப்பிடுகிறோம் ?

ஸ்ரீராமர்

693. பெரியபெருமாள் என்று யாருக்குப் பெயர் ? ஏன் அப்பெயர் ஏற்பட்டது ?

ஸ்ரீரங்கநாதர்.

பெருமாளான ராமபிரான் சீதையுடன் சேர்ந்து திருவாராதனம் செய்த பெருமாள். ஆகையாலே பெரியபெருமாள் என்று அரங்கனுக்குப் பெயர்.

694. ஸ்ரீரங்கவிமானம் முதலில் யாரால் ஆராதிக்கப்பட்டது ?

நான்முகன் - ப்ரஹ்மா சத்யலோகத்தில் ப்ரஹ்மா ஆராதித்தார்.

695. நான்முகன் ரங்கவிமானத்தை யாரிடம் ஆராதிக்கக் கொடுத்தார்?

சூரியன்

696. ரங்கவிமானம் இம்மண்ணுலகுக்கு வரக் காரணமாக இருந்தவர் யார் ?

இக்ஷ்வாகு என்னும் சூரிய குல அரசன்

697. ஸ்ரீரங்கத்தைப் பற்றி எந்த புராதன, இதிகாசங்கள் கூறுகின்றன?

1. கருடபுராணம் 2. ப்ரம்மாண்டபுராணம் 3. ஸ்ரீரங்கப்ரம்மவித்தை 4. பாரமேசுவர சம்ஹிதை

5.வால்மீகி ராமாயணம் - உத்தரகாண்டம்

698. திருவரங்கம் கோயிலைச் சுற்றி இருக்கும் ஸப்த ப்ரகாரங்கள் எவை ?

1. பூலோகம் - மாடங்கள் சூழ்ந்துள்ள சுற்று;

2. புவர்லோகம் - திருவிக்ரம சோழன் சுற்று;

3. ஸுவர்லோகம் - அகளங்கனென்னும் கிளிச்சோழன் சுற்று; 4. மஹர்லோகம் - குலசேகரன் சுற்று; 5. ஜனர்லோகம் - ஆலிநாடன் அமர்ந்துறையும் வீதி (திருமங்கை ஆழ்வார் சுற்று) 6. தபோலோகம் - ராஜமஹேந்திர சோழன் சுற்று; 7. ஸத்ய லோகம் - (கர்ப்ப க்ருஹமுள்ள சுற்று தர்ம வர்ம சோழ மன்னன் சுற்று

699. ஏழு சுற்றுகள் இருக்கும் திருவரங்கன் கோயில் பரப்பளவு என்ன?

156 ஏக்கர்

700. திருவரங்கத்தில் அமைந்துள்ள கோயில்கள், கோபுரங்கள், மண்டபங்கள் எத்தனை ?

51 கோயில்கள், 22 கோபுரங்கள் (புது கோபுரத்தையும் சேர்த்து) 108 மண்டபங்கள்

701. ரங்க மண்டபத்தில் எத்தனை தூண்கள் உள்ளன ?

காயத்திரியின் 24 அக்ஷரங்களைக் குறிக்கும் 24 தூண்கள் உள்ளன.

702. அடையவளைஞ்சான் மதில் சுவர் எவ்வாறு அமைந்துள்ளது ?

ஏழு சுற்றுக்களையும் சூழ்ந்து அரணாக அடையவளைஞ்சான் மதில் சுவர் அமைந்துள்ளது.

703. வெளி ஆண்டாள் சன்னதி எங்கு அமைந்துள்ளது ?

அடையவளஞ்சான் திருச்சுற்றில் பாண்டியன் வல்லபதேவனால் கட்டப்பட்ட ஆண்டாள் கோயில் உள்ளது. ஆண்டாள் இவ்விடத்தில் இறங்கி, காவிரியில் குளித்து புத்தாடை அணிந்து பிறகு பல்லக்கில் ஏறி மறைந்ததாகக் கூறுவர். மணக்கோலத்தில் ஆண்டாள் அமர்ந்திருக்கிறாள்.

704. ஸ்வம்வ்யக்த ஸ்தலங்கள் எவை ?

திருவரங்கம், ஸ்ரீமுஷ்ணம், திருமலை, சாளக்கிராமம், நைமிசாரண்யம், வானமாமலை, புஷ்கரம், பத்ரிகாசிரமம். இவற்றில் முதன்மையானது திருவரங்கம்.

705. திருவரங்கம் திருக்கோயிலைச் சார்ந்த தீர்த்தங்கள் எத்தனை ? அவை யாவை ?

திருவரங்கம் திருக்கோயிலைச் சார்ந்து ஒன்பது தீர்த்தங்கள் உள்ளன. இரண்டு திருக்காவிரிகள். தென் திருக்காவேரி (காவேரி), வட திருக்காவேரி (கொள்ளிடம்)

706. திருவரங்கத்தை எத்தனை ஆழ்வார்கள் மங்களாசாஸனம் செய்துள்ளார்கள் ? அவை எத்தனை பாசுரங்கள் ?

11 ஆழ்வார்கள் திருவரங்கத்தை மங்களாசாஸனம் செய்துள்ளனர். மொத்தம் 247 பாசுரங்கள் ஆகும்.

707. திருவரங்க கோயிலில் எத்தனை கோபுரங்கள் உள்ளன ?

17 கோபுரங்கள்.

708. அரங்கன் தென்திசை நோக்கிப் பள்ளி கொள்ளக் காரணம் என்ன ?

எப்போதும் விபீடணனைக் கடாக்ஷிப்பதற்காக அரங்கன் தென்திசை நோக்கி பள்ளி கொண்டுள்ளார்.

709. அரங்கனை மட்டும் பாடிய ஆழ்வார் யார் ?

தொண்டரடிப் பொடியாழ்வார்

710. அரங்கனுக்கு மட்டுமே அமைந்த திவ்யப்ரபந்தங்கள் யாவை?

திருப்பள்ளியெழுச்சி, திருமாலை

711. பிற திவ்யதேசத்து எம்பெருமானை விட அரங்கனுக்கு அமைந்த தனிப்பெருமைகள் என்ன ?

1. திருப்பாணாழ்வாரைத் தன்னுடன் சேர்த்துக் கொண்டமை.

2. ஆண்டாளை மணம் புரிந்து தன்னுடன் சேர்த்துக் கொண்டமை.

3. இராமானுஜரைத் தன்னிடத்திற்கு வரதரிடம் யாசித்து அழைத்து வந்தமை.

4. திருவாய்மொழிக்கு ஏற்றம் கொடுத்து உத்ஸவம் நடத்திக் கொள்ளுதல்.

5. மாமுனிகளிடம் திருவாய்மொழி ஈடு காலக்ஷேபம் சிஷ்யனாய் நின்று கேட்டமை.

6. ஸ்ரீசைலேச தனியன் இயற்றி ஸமர்ப்பித்தமை.

7. எம்பெருமானார்க்கு உடையவர் என்று திருநாமம் சாற்றியமை.

8. நம்மாழ்வார் என்ற பெயரைச் சடகோபனுக்கு அளித்தமை.

9. பட்டரைத் திருமணத்தூணிடை தொட்டிலிட்டு தாலாட்டியமை.

10. திருமந்திரம், த்வயம், சர்மச்லோகம் (ரஹஸ்யத்ரயம்) இவற்றைப் பெரியபெருமாள், பெரியபிராட்டியாருக்கு அருளிச் செய்து ஆசார்ய பரம்பரையைத் தொடங்கி வைத்தார்.

11. லக்ஷ்மி நாத ஸமாரம்பாம என்று குருபரம்பரையை தொடக்கியமை மற்றும் பல எண்ணற்ற பெருமை.

712. திருவரங்கத்தில் அவதரித்த ஆசார்யர்கள் யாவர் ?

அ) பெரிய நம்பி ஆ) பராசர பட்டர்

இ) வடக்குத்திருவீதி பிள்ளை ஈ) பிள்ளை லோகாசாரியார் மற்றும் பலர்.

713. கிளி கூறிய ச்லோகம் என்ன ?

காவேரி விரஜாஸேயம் வைகுண்டம் ரங்கமந்திரம்

ஸவாஸுதேவோ ரங்கேஶ : ப்ரத்யக்ஷம் பரமம்பதம் ।

விமானம் ப்ரணவாகாரம் வேத ச்ருங்கம் மஹாத்புதம்

ஸ்ரீரங்கசாயீ பகவான் ப்ரணவார்த்த ப்ரகாசக : ।।

714. கிளிச் சோழன் யார் ?

ஒரு காலத்தில் ஸ்ரீரங்கம் கோயில் புதைந்து மணல் மேடாக இருந்தது. அப்போது கிளியொன்று அந்த மணல்மேட்டில் அமர்ந்து ரங்கா என்று கத்தி ஒரு ச்லோகமும் கூறிக் கொண்டே சுற்றி வந்தது. அதைக் கேட்ட சோழ மன்னன் அவ்விடத்தை அகழ்ந்து ரங்க விமானத்தை கண்டெடுத்துக் கோயில் கட்டினான். அவனுக்கு அதனால் கிளிச்சோழன் என்ற பெயர் ஏற்பட்டது. (கிளி கூறியதைக் கேட்டு நடந்த சோழன்)

715. ஸ்ரீரங்கம் கோயில் விமானத்தின் பெயர் என்ன ?

ப்ரணவாகார விமானம்

716. ப்ரணயகலஹ உத்ஸவம் பற்றிக் குறிப்பு வரைக ?

ப்ரணயக்லஹம் - ஊடல் விழா - பங்குனி உத்திரம் அன்று நடைபெறும்.

பெருமாளுக்கும் தாயாருக்கும் நடக்கும் ஊடல் இதில் காட்டப்படும். ஆகமத்தில் இவ்விழா வேறு சூழலில் நடைபெற்றதாகக் கூறப்பட்டுள்ளது.

717. ஸ்ரீரங்கம் கோயில் எந்த ஆகம முறையில் நடைபெறுகிறது ?

பாஞ்சராத்ர ஆகமம், பாரமேசுவர ஸம்ஹிதை.

718. திருவரங்கம் எம்பெருமான் திருமங்கையாழ்வாருக்கு தமது 10 அவதாரங்களைக் காண்பித்த இடம் எது ?

திருமங்கை மன்னன் திருமாளிகை என்கிற தசாவதார சன்னதி.

இன்றும் பெருமாள் பத்து அவதாரங்களாக சேவை சாதிக்கிறார்.

719. திருவரங்கநாதனைப் பற்றிப் பராசரபட்டர் எந்த க்ரந்தத்தில் கூறியுள்ளார் ?

ஸ்ரீரங்கராஜஸ்தவம், ஸ்ரீரங்கநாத ஸ்தோத்ரம்

720. ஸ்ரீரங்கேச புரோஹிதர் யார் ?

ஸ்ரீ பராசர பட்டர் என்னும் ஆசார்யர்.

721. திருவரங்கனின் அண்ணன் யார் ?

ஸ்ரீமணவாள மாமுனிகள் சிஷ்யரான கோயிலண்ணன் வரத நாராயண குருவைத் திருவரங்கன் 'அண்ணு' என்று அழைத்தான்.

722. பங்குனி உத்திரத்தின் சிறப்பு என்ன ?

அ)ஸ்ரீரங்க நாச்சியார் பாரில் (பூலோகத்தில்) உதித்த நன்னாள்

ஆ) இராமனுக்கும் சீதைக்கும் திருமணம் நடந்த நாள்

இ)ஸ்ரீரங்க நாச்சியாருக்கும், அரங்கனுக்கும் ஊடல் ஏற்பட்டு நம்மாழ்வாரால் சமாதானம் செய்விக்கப்பட்டு, வருடத்திற்கு ஒரு நாள் இருவரும் சேர்த்தியில் இருக்கும் நாள்.

ஈ) உடையவர் இச்சேர்த்தியில் கத்யத்ரயம் சேவித்து - இராமானுச சம்பந்த முடையார்க்கு மோக்ஷம் உண்டு என்று, நமக்காக திவ்ய தம்பதிகளை பிரார்த்தித்து வரம் பெற்ற நன்னாள்

உ) நஞ்சீயர் அவதரித்த நன்னாள்

723. அரங்கனின் ஆசார்யர் யார் ? ஏன் ?

ஸ்ரீமணவாள மாமுனிகள்

ஒரு முறை பவித்திர உத்ஸவ சாற்றுமுறையன்று அரங்கன் மாமுனிகளுக்கு அருளப்பாடிட்டு இன்று முதல் ஈடு காலக்ஷேபம் ஸாதியும் என்று கூறி, பிராட்டிமார்களுடன் அழகிய மணவாளன் திருமண்டபத்தில் எழுந்தருளி ஒரு வருட காலம் எல்லா உத்ஸவங்களையும் நிறுத்தச் சொல்லி திருவாய்மொழி வ்யாக்யானமான ஈட்டைக் கேட்டு, "ஈட்டுக் பெருக்கர்" என்ற பட்டம் கொடுத்து "ஸ்ரீசைலேச" என்றும் தனியனை சிறுவன் வடிவில் வந்து ஸமர்ப்பித்தார். தமது சேஷபீடத்தையும் தந்து சிறப்பித்தார்.

இன்றும் மாமுனிகளின் திருநக்ஷத்திர, திருஅத்யயனங் களைத் தாமே நடத்துகிறார்.

'போத மணவாளமாமுனி ஈடுரைப்பது கேட்டுப் பூரித்து நின்ற பெரிய பெருமாள்' என்று அரையர்கள் இன்றும் கொண்டாட்டம் சேவிக்கிறார்கள்.

724. காட்டழகிய சிங்கர் ஸந்நிதி எங்குள்ளது ?

காட்டழகிய சிங்கர் ஸந்நிதி திருவரங்கம் ரயில்நிலையம் அருகில் - ஊருக்கு வெளியில் அமைந்துள்ளது.

725. கம்பர் மண்டபம் எங்குள்ளது ?

தாயார் ஸந்நிதிக்கு எதிரில் உள்ள நான்கு கால் மண்டபத்திற்கு கம்பர் மண்டபம் என்று பெயர்.

726. கம்பர் மண்டபத்தின் சிறப்பு என்ன ?

கம்பர் இராமாயணத்தை (நாதமுனிகள் முன்னிலை யில்) இந்த மண்டபத்தில் அரங்கேற்றினார்.

727. மேட்டழகியசிங்கர் ஸந்நிதி - குறிப்பு வரைக

தாயார் ஸந்நிதிக்கு வெளியில் வலது புறத்தில் உச்சியில் (பல படிகள் கடந்து செல்ல வேண்டும்) (27 அடி உயரம்) மேட்டில் இரணியனை வதம் செய்யும் விதத்தில் எழுந்தருளியுள்ளார். இவருக்கு மேட்டழகிய சிங்கர் என்று பெயர். கம்பர் இராயமாயணம் இயற்றி அரங்கேற்றிய போது, இரணியன் வதை படலம் வந்த போது சிரித்தது செங்கட் சீயம் என்னும் இடத்தில் நிஜமாகச் சிரித்துத் தமது ஒப்புதலைக் கம்பராமாயணத்துக்கு வழங்கிய பெருமை மிக்க மூர்த்தி இவர்.

728. அர்ச்சாவதாரம் என்றால் என்ன ?

எம்பெருமான் எல்லோருடைய கண்களுக்கும் இலக்காகும்படி திருக்கோயில்களிலும், இல்லங்களிலும் உருவ வடிவத்தில் (சித்திரம், சிலை) இருந்து தன்னை வணங்குவோர்க்கு அருள் பாலிக்கும் நிலையே அர்ச்சாவதாரம் எனப்படும்.

729. உறையூர் கமலவல்லி நாச்சியார் - குறிப்பு வரைக

தர்மவர்மாவின் வம்சத்தில் வந்த நந்தசோழனுக்கு மகளாக லட்சுமி தேவியின் அம்சமாக கமலவல்லி நாச்சியார் அவதரித்தாள். பெருமாள் ஜீயபுரம் எழுந்தருளும் போது தோழிகளுடன் நந்தவனத்தில் இருந்த கமலவல்லி, பெருமாளைக் கண்டு விரும்பியதாகவும், பிறகு சோழ மன்னன் கமலவல்லியை அரங்கனுக்கு திருமணம் செய்து வைத்ததாகவும் நூல்கள் கூறுகின்றன. இன்றும் உறையூரில் அழகிய மணவாளனாக ரங்கநாதன் காட்சி தருகிறார். மணக்கோலத்தில் கமலவல்லித்தாயார் வீற்றிருக்கிறார்.

730. அரங்கனின் வேறு பெயர்கள் யாவை ?

1. பெரியபெருமாள் - பெருமாளான இராமன் ஆராதித்ததால்

2. நம்பெருமாள் - உத்ஸவர்

3. அழகிய மணவாளன் - உத்ஸவர் உறையூர் நாச்சியார், ஆண்டாள் இவர்களை மணம் புரிந்ததால்

4. ரங்கநாதன் ரங்கராஜன் - திருவரங்கத்தின் தலைவன். செங்கோலுடைய திருவரங்கச் செல்வனார்.

731. காவிரியின் தனிச்சிறப்பு யாது ?

கங்கையின் புனிதமாய காவிரி என்று தொண்டரடிப் பொடியாழ்வார் கொண்டாடும் ஏற்றம் உடையது.

732. திரு அத்யயனத் திருநாளில் திருநெடுந்தாண்டகம் முதன்மை பெறக் காரணம் என்ன ?

மேல்நாட்டில் (மைசூர்ப் பிராந்தியத்தில்) வேதாந்தி என்னும் அத்வைதியை இவ்வூர்ப் பெருமாளின் பிள்ளையாக கருதப்படுகிற பராசர பட்டர் திருநெடுந்தாண்டகம் என்னும் திருமங்கையாழ்வார் ப்ரபந்தத்தைக் கொண்டு வென்று அவரைத் தன் சீடராக்கிக் கொண்டார். அதனை முடித்து மீண்டும் திருவரங்கம் சேர்ந்தார். அந்நாள் திருவத்யயனத் திருநாளின் முந்தைய நாளாக இருந்தது. அதனால் இங்கு திருநெடுந்தாண்டகம் முதல் திருநாளுக்கு முன்பு சேவித்துக் கொண்டாடப்படுகிறது.

733. குலசேகரன்படி என்று எதற்குப் பெயர் ? ஏன் ?

நம் பெருமாள் மூலஸ்தானத்தை ஒட்டி அமைந்த படி குலசேகரன் படி எனப்படும்.

குலசேகராழ்வார் திருவேங்கடத்தில் படியாய் கிடந்து உன் பவள வாய் காண்பேனே என்று ‘படி’ (step) யாக இருக்க ஆசைப்பட்டதால் எல்லா திவ்யதேசங்களிலும் பெருமாள் மூலஸ்தானத்தை ஒட்டிய ‘படி’ (step) குலசேகரன் படி என்று அழைக்கப்படுகிறது.

734. திருமஞ்சனக் கட்டியம் - குறிப்பு வரைக

திருவரங்கத்தில் நம்பெருமாள் திருமஞ்சனம் கண்டருளும் போது பராசர பட்டர், வேதவ்யாச பட்டர் திருவம்சத்தினர் கட்டியம் சேவிப்பார்கள். இது முதலில் பராசரபட்டர் ஏற்படுத்தியதாகும். பராசரபட்டர் 64 திருமஞ்சன கட்டியம் செய்ததாகச் சொல்கின்றனர். இவை தனிச்லோகமாக, பெருமாளை நதி, கடல், மலை, சூரியன், வேதம் முதலியவையாக வர்ணித்தும் அல்லது பெருமாள் சேவை சாதிக்கிற நிலையை வர்ணித்தும் செய்யப்பட்டவையாகும். ச்லோகமும் அதன் விளக்கமும் பட்டர் திருவம்சத்தாரால் இன்றும் சேவிக்கப்பட்டுவருகிறது.

735. நரசிங்கனுக்கும், திருவரங்கனுக்கும் என்ன வேறுபாடு ?

ஒரு தூணின் நடுவில் தோன்றியவன் - நரசிங்கன்

இரண்டு தூண்களின் (திருமணத்தூண்) நடுவில் தோன்றுபவன் - திருவரங்கன்

பொலிக. ! பொலிக !! பொலிக !!!

## அட்டவணை – I

ஆழ்வார்கள் அவதார ஸ்தலம், திருநக்ஷத்திரம், அருளிய பிரபந்தங்கள், பாசுரங்களின் எண்ணிக்கை – பற்றிய தொகுப்பு

| வரிசை எண் | ஆழ்வார் | ஸ்தலம் | திருநக்ஷத்திரம் | அருளிய பிரபந்தம் | பாசுரங்களின் எண்ணிக்கை |
|---|---|---|---|---|---|
| 1. | பொய்கையாழ்வார் | திருவெஃகா (காஞ்சீபுரம்) | ஐப்பசி—திருவோணம் | முதல் திருவந்தாதி | 100 |
| 2. | பூதத்தாழ்வார் | திருக்கடல்மல்லை (மஹாபலிபுரம்) | ஐப்பசி—அவிட்டம் | இரண்டாம் திருவந்தாதி | 100 |
| 3. | பேயாழ்வார் | திருமயிலை (மயிலாப்பூர்) | ஐப்பசி—சதயம் | மூன்றாம் திருவந்தாதி | 100 |
| 4. | திருமழிசையாழ்வார் | திருமழிசை | தை—மகம் | நான்முகன் திருவந்தாதி<br>திருச்சந்தவிருத்தம் | 96<br>120 |
| 5. | நம்மாழ்வார் | ஆழ்வார்திருநகரி | வைகாசி—விசாகம் | திருவிருத்தம்<br>திருவாசிரியம்<br>பெரிய திருவந்தாதி<br>திருவாய்மொழி | 100<br>7<br>87<br>1102 |
| 6. | மதுரகவியாழ்வார் | திருக்கோளூர் (நவதிருப்பதியில் ஒன்று) | சித்திரை—சித்திரை | கண்ணிநுண்சிறுத்தாம்பு | 11 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 7. | குலசேகராழ்வார் | திருவஞ்சிக்களம் | மாசி–புனர்வஸு | பெருமாள் திருமொழி | 105 |
| 8. | பெரியாழ்வார் | ஸ்ரீவில்லிபுத்தூர் | ஆனி–சுவாதி | திருப்பல்லாண்டு<br>பெரியாழ்வார் திருமொழி | 12<br>461 |
| 9. | ஆண்டாள் | ஸ்ரீவில்லிபுத்தூர் | ஆடி–பூரம் | திருப்பாவை<br>நாச்சியார் திருமொழி | 30<br>143 |
| 10. | தொண்டரடிப் பொடியாழ்வார் | திருமண்டங்குடி | மார்கழி–கேட்டை | திருமாலை<br>திருப்பள்ளியெழுச்சி | 45<br>10 |
| 11. | திருப்பாணாழ்வார் | உறையூர் (ஸ்ரீரங்கம்) | கார்த்திகை–ரோஹிணி | அமலனாதிபிரான் | 10 |
| 12. | குமுதவல்லி ஸமேத திருமங்கையாழ்வார் | (திருவாலி) திருநகரி திருக்குறையலூர் | கார்த்திகை–கார்த்திகை | பெரியதிருமொழி<br>திருகுறுந்தாண்டகம்<br>திருவெழுக்கூற்றிருக்கை<br>சிறியதிருமடல்<br>பெரியதிருமடல்<br>திருநெடுந்தாண்டகம் | 1084<br>20<br>1<br>1–77½<br>1–148½<br>30 |

அட்டவணை – II

ஆச்சார்யர்கள் அவதார ஸ்தலம், திருநக்ஷத்திரம் பற்றிய விவரங்கள்

பெரிய பெருமாள்
பெரிய பிராட்டியார்
சேனைமுதலி / விஷ்வக்சேனர்

| வரிசை எண் | பெயர் | அவதார ஸ்தலம் | திருநக்ஷத்திரம் |
|---|---|---|---|
| 1. | ஸ்ரீமந் நாத முனிகள் | வீர நாராயணபுரம் (காட்டுமன்னார்குடி) | ஆனி மாதம் –அனுஷம் |
| 2. | உய்யக்கொண்டார் (புண்டரீகாக்ஷர்) | திருவெள்ளறை | சித்திரை – கிருத்திகை |
| 3. | மணக்கால் நம்பி (ஸ்ரீராம மிச்ரர்) | மணக்கால் (லால்குடி அருகில்) | மாசி, மகம் |
| 4. | ஆளவந்தார் (யமுனைத்துறைவர்) | காட்டுமன்னார்குடி | ஆடி, உத்திராடம் |
| 5. | பெரியநம்பி (பராங்குசதாஸர்) | திருவரங்கம் | மார்கழி, கேட்டை |
| 6. | திருக்கோட்டியூர் நம்பி | திருக்கோட்டியூர் | வைகாசி, ரோஹிணி |
| 7. | திருமாலையாண்டான் | திருமாலிருஞ்சோலை (அழகர் கோவில்) | மாசி, மகம் |
| 8. | பெரியதிருமலை நம்பி | திருமலை | சித்திரை, ஸ்வாதி |
| 9. | திருவரங்கபெருமாளரையர் | திருவரங்கம் | வைகாசி, கேட்டை |
| 10. | திருக்கச்சி நம்பி | பூவிருந்தவல்லி | மாசி, மிருகசீரிடம் |
| 11. | மாறனேரி நம்பி | புராந்தகம் (பாண்டியநாடு) | ஆடி, ஆயில்யம் |
| 12. | எம்பெருமானார் | ஸ்ரீபெரும்புதூர் | சித்திரை, திருவாதிரை |
| 13. | கூரத்தாழ்வான் (இயற்பெயர் திருமறுமார்பன்) | கூரம் (காஞ்சிபுரம் அருகில்) | தை, ஹஸ்தம் |

| | | | |
|---|---|---|---|
| 14. | திரவரங்கத்தமுதனார் | திருவரங்கம் | பங்குனி, ஹஸ்தம் |
| 15. | வடுகநம்பி | ஸாலக்ராமம் (திருநாராயணபுரம் அருகில்) | மாசி, புனர்பூசம் |
| 16. | முதலியாண்டான் | ஸ்ரீபுருசமங்கலம் (பேட்டை என்று பூவிருந்தவல்லி அருகில்) | சித்திரை, புனர்பூசம் |
| 17. | நடாதூர் அம்மாள் | | |
| 18. | எங்களாழ்வான் | திருவெள்ளறை | |
| 19. | கிடாம்பி அப்புள்ளார் | | சித்திரை, ரோஹினி |
| 20. | எம்பார் | மதுரமங்கலம் (ஸ்ரீபெரும்புதூர் அருகில்) | தை, புனர்பூசம் |
| 21. | பட்டர் (பராசரபட்டர்) | ஸ்ரீரங்கம் | வைகாசி, அனுஷம் |
| 22. | நஞ்சீயர்) | திருநாராயணபுரம் | பங்குனி, உத்திரம் |
| 23. | நம்பிள்ளை | நம்பூர் (சோழநாடு) | கார்த்திகை, கிருத்திகை |
| 24. | பிள்ளை லோகாசாரியர் | திருவரங்கம் | ஐப்பசி, திருவோணம் |
| 25. | வடக்கு திருவீதிப்பிள்ளை | ஸ்ரீரங்கம் | ஆனி, சுவாதி |
| 26. | பெரியவாச்சான்பிள்ளை | சேங்கணூர் | ஆவணி, ரோகிணி |
| 27. | வாதிகேஸரி அழகியமணவாள ஜீயர் | மன்னார்கோவில் | ஆனி, சுவாதி |
| 28. | கூரகுலோத்தம தாசர் | ஸ்ரீரங்கம் | ஐப்பசி, திருவாதிரை |
| 29. | திருவாய் மொழிப்பிள்ளை (திருமலையாழ்வார், ஸ்ரீசைலேசர்) | குண்டிகை (குந்தீநகரம்) (பாண்டியநாடு) மதுரை அருகில் | வைகாசி, விசாகம் |
| 30. | ஸ்ரீவேதாந்த தேசிகன்) | தூப்புல் (காஞ்சீபுரம்) | புரட்டாசி, திருவோணம் |
| 31. | மணவாள மாமுனிகள், பெரியஜீயர் | ஆழ்வார் திருநகரி | ஐப்பசி, மூலம் |

## திருப்பல்லாண்டு பெரியாழ்வார்திருமொழிகளின்

## தனியன்கள்

### 1. நாதமுனிகள் அருளிச்செய்தது

கு₃ருமுக₂மநதீ₄த்ய ப்ராஹ வேதா₃நசேஷாந்
நரபதிபரிக்லுப்தம்சுல்கமாதா₃துகாம:।
ச்வசுரமமரவந்த்₃யம் ரங்க₃நாத₂ஸ்ய ஸாக்ஷாத்
த்₃விஜகுலதிலகம் தம் விஷ்ணுசித்தம் நமாமி॥

### 2,3 பாண்டியபட்டர் அருளிச்செய்தவை

மின்னார்தடமதிள்சூழ் வில்லிபுத்தூரென்று ஒருகால்*
சொன்னார்கழற்கமலம் சூடினோம்* – முன்னாள்
கிழியறுத்தானென்றுரைத்தோம், கீழ்மையினிற்சேரும்*
வழியறுத்தோம் நெஞ்சமே ! வந்து

பாண்டியன் கொண்டாடப் பட்டர்பிரான்வந்தானென்று*
ஈண்டியசங்கமெடுத்தூத * – வேண்டிய
வேதங்களோதி விரைந்துகிழியறுத்தான் *
பாதங்கள்யாமுடையபற்று

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்

## திருப்பல்லாண்டு

1.✦✦ பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு *
பலகோடி நூறாயிரம்
மல்லாண்டதிண்டோள்மணிவண்ணா! * உன்
செவ்வடிசெவ்விதிருக்காப்பு.

2.✦✦ அடியாமோடும்நின்னோடும் பிரிவின்றிஆயிரம்பல்லாண்டு*
வடிவாய்நின்வலமார்பினில் வாழ்கின்றமங்கையும்பல்லாண்டு*
வடிவார்சோதிவலத்துறையும் சுடராழியும்பல்லாண்டு*
படைபோர்புக்குமுழங்கும் அப்பாஞ்சசன்னியமும் பல்லாண்டே.

3. வாழாட்பட்டுநின்றீர்உள்ளீரேல் வந்துமண்ணும்மணமும்கொண்மின்*
கூழாட்பட்டுநின்றீர்களை எங்கள்குழுவினில்புகுதலொட்டோம்*
ஏழாட்காலும்பழிப்பிலோம்நாங்கள் இராக்கதர்வாழ்* இலங்கை
பாழாளாகப்படைபொருதானுக்குப் பல்லாண்டுகூறுதுமே.

4. ஏடுநிலத்தில்இடுவதன்முன்னம்வந்து எங்கள் குழாம்புகுந்து*
கூடுமனமுடையீர்கள் வரம்பொழிவந்தொல்லைக்கூடுமினோ*
நாடுநகரமும்நன்கறிய நமோநாராயணாயவென்று*
பாடுமனமுடைப்பத்தருள்ளீர் ! வந்து பல்லாண்டு கூறுமினே.

5. அண்டக்குலத்துக்கதிபதியாகி அசுரரிராக்கதரை*
இண்டைக்குலத்தையெடுத்துக்களைந்த இருடிகேசன்தனக்கு*
தொண்டக்குலத்திலுள்ளீர்! வந்தடிதொழுது ஆயிரநாமம்சொல்லி*
பண்டைக்குலத்தைத்தவிர்ந்து பல்லாண்டுபல்லாயிரத்தாண்டென்மினே.

6. எந்தைதந்தைதந்தைதந்தைதம்மூத்தப்பன் ஏழ்படிகால்தொடங்கி*
வந்துவழிவழிஆட்செய்கின்றோம்* திருவோணத்திருவிழவில்
அந்தியம்போதிலரியுருவாகி அரியையழித்தவனை*
பந்தனைதீரப்பல்லாண்டு பல்லாயிரத்தாண்டென்றுபாடுதுமே.

7. தீயிற்பொலிகின்றசெஞ்சுடராழி திகழ்திருச்சக்கரத்தின்*
கோயிற்பொறியாலேஒன்றுண்டுநின்று குடிகுடிஆட்செய்கின்றோம்*
மாயப்பொருபடைவாணனை ஆயிரந்தோளும்பொழிகுருதி
பாய* சுழற்றியஆழிவல்லானுக்குப் பல்லாண்ட கூறுதுமே.

8. நெய்யிடைநல்லதோர்சோறும் நியதமும்அத்தாணிச்சேவகமும்*
கையடைக்காயும்கழுத்துக்குப்பூணொடு காதுக்குக்குண்டலமும்*
மெய்யிடநல்லதோர்சாந்தமும்தந்து என்னைவெள்ளுயிராக்கவல்ல*
பையுடைநாகப்பகைக்கொடியானுக்குப் பல்லாண்டு கூறுவனே.

9. உடுத்துக்களைந்த நின்பீதகவாடையுடுத்துக் கலத்ததுண்டு*
தொடுத்ததுழாய்மலர்சூடிக்களைந்தன சூடும்இத்தொண்டர்களோம்*
விடுத்ததிசைக்கருமம்திருத்தித் திருவோணத்திருவிழவில்*
படுத்தபைந்நாகணைப்பள்ளிகொண்டானுக்குப் பல்லாண்டுகூறுதுமே.

10. எந்நாள்எம்பெருமான் உன்தனக்கடியோமென்றெழுத்துப்பட்ட
அந்நாளே* அடியோங்களடிக்குடில் வீடுபெற்றுஉய்ந்ததுகாண்*
செந்நாள்தோற்றித் திருமதுரையுள்சிலைகுனித்து* ஐந்தலைய
பைந்நாகத்தலைப்பாய்ந்தவனே! உன்னைப்பல்லாண்டு கூறுதுமே.

11.✦✦ அவ்வழக்கொன்றுமில்லா அணிகோட்டியர்கோன்* அபிமானதுங்கன்
செல்வனைப்போலத் திருமாலே! நானும்உனக்குப்பழவடியேன்*
நல்வகையால்நமோநாராயணாவென்று நாமம்பலபரவி*
பல்வகையாலும்பவித்திரனே! உன்னைப்பல்லாண்டுகூறுவனே.

12.✦✦ பல்லாண்டென்று பவித்திரனைப்பரமேட்டியை* சார்ங்கமென்னும்
வில்லாண்டான்தன்னை வில்லிபுத்தூர்விட்டுசித்தன்விரும்பியசொல்*
நல்லாண்டென்றுநவின்றுரைப்பார் நமோநாராயணாயவென்று*
பல்லாண்டும் பரமாத்மனைச் சூழ்ந்திருந்தேத்துவர்பல்லாண்டே.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்

## திருப்பள்ளியெழுச்சி தனியன்கள்

### திருமாலையாண்டான் அருளிச்செய்தது

தமேவ மத்வா பரவாஸுதே₃வம் ரங்கே₃யம் ராஜவத₃ர்ஹணீயம்
ப்ராபோ₃தி₄கீம்யோऽக்ருதஸூக்திமாலாம்ப₄க்தாங்க்₄ரிரேணும்ப₄க₃வந்தமீடே₃

### திருவரங்கப் பெருமாளரையர் அருளிச்செய்தது

மண்டங்குடியென்பர் மாமறையோர்மன்னியசீர்*
தொண்டரடிப்பொடி தொன்னகரம்* – வண்டு
திணர்த்தவயல் தென்னரங்கத்தம்மானைப்* பள்ளி
யுணர்த்தும்பிரானுதித்தவூர்.

### தொண்டரடிப்பொடியாழ்வார் அருளிச்செய்த

## திருப்பள்ளியெழுச்சி

1.✦✦ கதிரவன்குணதிசைச்சிகரம்வந்தணைந்தான்
கனையிருளகன்றதுகாலையம்பொழுதாய்*
மதுவிரிந்தொழுகினமாமலரெல்லாம்
வானவரரசர்கள்வந்துவந்தீண்டி*
எதிர்திசைநிறைந்தனர்இவரொடும்புகுந்த
இருங்களிற்றீட்டமும்பிடியொடுமுரசும்*
அதிர்தலில்அலைகடல்போன்றுளதுஎங்கும்
அரங்கத்தம்மா ! பள்ளியெழுந்தருளாயே.

2. கொழுங்கொடிமுல்லையின்கொழுமலரணவிக்
கூர்ந்ததுகுணதிசைமாருதம்இதுவோ*
எழுந்தனமலரணைப் பள்ளிகொள்அன்னம்
ஈன்பனிநனைந்ததமிருஞ்சிறகுதறி*
விழுங்கியமுதலையின்பிலம்புரைபேழ்வாய்
வெள்ளெயிறுறஅதன்விடத்தினுக்கனுங்கி
அழுங்கியஆனையினருந்துயர்கெடுத்த
அரங்கத்தம்மா ! பள்ளியெழுந்தருளாயே.

3. சுடரொளிபரந்தனசூழ்திசையெல்லாம்
துன்னியதாரகைமின்னொளிசுருங்கி*
படரொளிபசுத்தனன்பனிமதிஇவனோ
பாயிருளகன்றது, பைம்பொழிற்கமுகின்*
மடலிடைக்கீறிவண்பாளைகள்நாற
வைகறைகூர்ந்ததுமாருதம்இதுவோ*
அடலொளிதிகழ்தருகிரியந்தடக்கை
அரங்கத்தம்மா ! பள்ளியெழுந்தருளாயே.

4. மேட்டிளமேதிகள் தளைவிடும்ஆயர்கள்
வேய்ங்குழலோசையும்விடைமணிக்குரலும்*
ஈட்டியஇசைதிசைபரந்தனவயலுள்
இரிந்தனசுரும்பினம், இலங்கையர்குலத்தை*
வாட்டியவரிசிலைவானவரேறே !
மாமுனிவேள்வியைக்காத்து* அவபிரதம்
ஆட்டியஅடுதிறலயோத்தியெம்மரசே !
அரங்கத்தம்மா ! பள்ளியெழுந்தருளாயே.

5. புலம்பினபுட்களும்பூம்பொழில்களின்வாய்,
போயிற்றுக்கங்குல்புகுந்ததுபுலரி*
கலந்ததுகுணதிசைக்கனைகடலரவம்
களிவண்டுமிழற்றியகலம்பகம்புனைந்த*
அலங்கலந்தொடையல்கொண்டுஅடியிணைபணிவான்
அமரர்கள்புகுந்தனர்ஆதலில்அம்மா !*
இலங்கையர்கோன்வழிபாடுசெய்கோயில்
எம்பெருமான் ! பள்ளியெழுந்தருளாயே.

6. இரவியர்மணிநெடுந்தேரொடும்இவரோ ?
இறையவர் பதினொருவிடையரும்இவரோ ?*
மருவியமயிலினனறுமுகன்இவனோ ?
மருதரும்வசுக்களும்வந்துவந்தீண்டி*
புரவியோடுஆடலும்பாடலும் தேரும்
குமரதண்டம்புகுந்துஈண்டியவெள்ளம்*
அருவரையனையநின்கோயில்முன்இவரோ ?
அரங்கத்தம்மா ! பள்ளியெழுந்தருளாயே.

7. அந்தரத்தமரர்கள்கூட்டங்கள்இவையோ ?
அருந்தவமுனிவரும்மருதரும்இவரோ ?
இந்திரனானையும்தானும்வந்திவனோ ?
எம்பெருமான் ! உனகோயிலின்வாசல்*
சுந்தரர்நெருக்கவிச்சாதரர்நூக்க
இயக்கரும்மயங்கினர்திருவடித்தொழுவான்*
அந்தரம்பாரிடமில்லைமற்றிதுவோ ?
அரங்கத்தம்மா ! பள்ளியெழுந்தருளாயே.

8. வம்பவிழ்வானவர்வாயுறைவழங்க
மாநிதிகபிலைஒண்கண்ணாடிமுதலா*
எம்பெருமான்படிமக்கலங்காண்டற்கு
ஏற்பனவாயினகொண்டுநன்முனிவர்*
தும்புருநாரதர்புகுந்தனர்இவரோ ?
தோன்றினன்இரவியும்துலங்கொளிபரப்பி*
அம்பரதலத்தினின்றுஅகல்நின்றதுஇருள்போய்
அரங்கத்தம்மா ! பள்ளியெழுந்தருளாயே.

9.✦✦ ஏதமில்தண்ணுமையெக்கம்மத்தளி
யாழ்குழல்முழவமோடுஇசைதிசைகெழுமி*
கீதங்கள் பாடினர்கின்னரர்கெருடர்கள்
கெந்தருவருமிவர்கங்குலுமெல்லாம்*
மாதவர்வானவர்சாரணர்இயக்கர்
சித்தரும்மயங்கினர்திருவடித்தொழுவான்*
ஆதலில்அவர்க்குநாளோலக்கம்அருள
அரங்கத்தம்மா ! பள்ளியெழுந்தருளாயே.

10.✦✦ கடிமலர்க்கமலங்களமலர்ந்தனஇவையோ ?
கதிரவன்கனைகடல்முளைத்தனன்இவனோ ?*
துடியிடையார்சுரிகுழல்பிழிந்துதறித்
துகிலுடுத்தேறினர்சூழ்புனலரங்கா!*
தொடையொத்ததுளவமும்கூடையும்பொலிந்து
தோன்றியதோள்தொண்டரடிப்பொடியென்னும்
அடியனை* அளியனென்றருளியுன்னடியார்க்கு
ஆட்படுத்தாய் ! பள்ளியெழுந்தருளாயே.

தொண்டரடிப்பொடியாழ்வார் திருவடிகளே சரணம்

# திருப்பாவைத் தனியன்கள்

### ஸ்ரீபராசரபட்டர் அருளிச்செய்தது

நீளாதுங்க₃ஸ்தநகி₃ரிதடீஸுப்தமுத்போ₃த்₄ய க்ருஷ்ணம்
பாரார்த்₂யம் ஸ்வம் ச்ருதிசதசிரஸ்ஸித்₃த₄மத்₄யாபயந்தீ
ஸ்வோச்சி₂ஷ்டாயாம் ஸ்ரஜிநிக₃ளிதம் யா ப₃லாத்க்ருத்யபு₄ங்க்தே
கோ₃தா₃ தஸ்யை நம இத₃மித₃ம் பூ₄ய ஏவாஸ்து பூ₄ய

### உய்யக்கொண்டார் அருளிச்செய்தவை

அன்னவயல்புதுவையாண்டாள்* அரங்கற்குப்
பன்னுதிருப்பாவைப்பல்பதியம்* – இன்னிசையால்
பாடிக்கொடுத்தாள் நற்பாமாலை* பூமாலை
சூடிக்கொடுத்தாளைச் சொல்லு.

சூடிக்கொடுத்தசுடர்க்கொடியே ! தொல்பாவை*
பாடியருளவல்லபல்வளையாய் !* – நாடிநீ
வேங்கடவற்குஎன்னைவிதியென்றஇம்மாற்றம்*
நாம்கடவாவண்ணமேநல்கு.

ஆண்டாள் திருவடிகளே சரணம்

### ஆண்டாள் அருளிச்செய்த

# திருப்பாவை

1.✦✦ மார்கழித்திங்கள் மதிநிறைந்தநன்னாளால்*
நீராடப்போதுவீர் ! போதுமினோநேரிழையீர் !*
சீர்மல்கும்ஆய்ப்பாடிச் செல்வச்சிறுமீர்காள்!*
கூர்வேல்கொடுந்தொழிலன் நந்தகோபன்குமரன்*
ஏரார்ந்தகண்ணி யசோதையிளஞ்சிங்கம்*
கார்மேனிச்செங்கண் கதிர்மதியம்போல்முகத்தான்*
நாராயணனே நமக்கேபறைதருவான்*
பாரோர்புகழப் படிந்தேலோரெம்பாவாய்.

2. வையத்துவாழ்வீர்காள் ! நாமும்நம்பாவைக்கு*
செய்யும்கிரிசைகள் கேளீரோ* பாற்கடலுள்
பையத்துயின்ற பரமனடிபாடி*
நெய்யுண்ணோம்பாலுண்ணோம் நாட்காலேநீராடி*
மையிட்டெழுதோம் மலரிட்டுநாம்முடியோம்*
செய்யாதனசெய்யோம் தீக்குறளை சென்றோதோம்*
ஐயமும் பிச்சையும் ஆந்தனையும்கைகாட்டி*
உய்யுமாறெண்ணி உகந்தேலோரெம்பாவாய்.

3.++ ஓங்கியுலகளந்த உத்தமன்பேர்பாடி
நாங்கள்நம்பாவைக்குச் சாற்றிநீராடினால்*
தீங்கின்றிநாடெல்லாம் திங்கள்மும்மாரிபெய்து*
ஓங்குபெருஞ்செந்நெ லூடுகயலுகள*
பூங்குவளைப்போதில் பொறிவண்டுகண்படுப்ப*
தேங்காதேபுக்கிருந்து சீர்த்தமுலைபற்றி
வாங்க* குடம்நிறைக்கும் வள்ளல்பெரும்பசுக்கள்*
நீங்காதசெல்வம் நிறைந்தேலோரெம்பாவாய்.

4. ஆழிமழைக்கண்ணா ! ஒன்றுநீகைகரவேல்*
ஆழியுள்புக்கு முகந்துகொடுஆர்த்தேறி*
ஊழிமுதல்வ னுருவம்போல்மெய்கறுத்து*
பாழியந்தோளுடைப் பற்பநாபன்கையில்*
ஆழிபோல்மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து*
தாழாதேசார்ங்கமுதைத்த சரமழைபோல்*
வாழஉலகினில்பெய்திடாய்* நாங்களும்
மார்கழிநீராட மகிழ்ந்தேலோரெம்பாவாய்.

5. மாயனைமன்னு வடமதுரைமைந்தனை*
தூயபெருநீர் யமுனைத்துறைவனை*
ஆயர்குலத்தினில் தோன்றும்அணிவிளக்கை*
தாயைக்குடல்விளக்கம்செய்த தாமோதரனை*
தூயோமாய்வந்துநாம் தூமலர்தூவித்தொழுது*
வாயினால்பாடி மனத்தினால்சிந்திக்க*
போயபிழையும் புகுதருவான்நின்றனவும்*
தீயினில்தூசாகும் செப்பேலோரெம்பாவாய்.

6. புள்ளும்சிலம்பினகாண் புள்ளரையன் கோயில்
வெள்ளைவிளிசங்கின் பேரரவம்கேட்டிலையோ ?*
பிள்ளாய் ! எழுந்திராய் பேய்முலைநஞ்சுண்டு*
கள்ளச்சகடம் கலக்கழியக்காலோச்சி*
வெள்ளத்தரவில் துயிலமர்ந்தவித்தினை*
உள்ளத்துக்கொண்டு முனிவர்களும்யோகிகளும்*
மெள்ளஎழுந்து அரியென்றபேரரவம்*
உள்ளம்புகுந்து குளிர்ந்தேலோரெம்பாவாய்.

7. கீசுகீசென்றுஎங்கும் ஆனைச்சாத்தன்* கலந்து
பேசினபேச்சரவம் கேட்டிலையோ ? பேய்ப்பெண்ணே!
காசும்பிறப்பும்கலகலப்பக்கைபேர்த்து*
வாசநறுங்குழலாய்ச்சியர்* மத்தினால்
ஓசைபடுத்த தயிரரவம்கேட்டிலையோ ?*
நாயகப்பெண்பிள்ளாய்! நாராயணன்மூர்த்தி*
கேசவனைப்பாடவும் நீகேட்டேகிடத்தியோ ?*
தேசமுடையாய்! திறவேலோரெம்பாவாய்.

8. கீழ்வானம்வெள்ளென்று எருமைசிறுவீடு*
மேய்வான்பரந்தனகாண் மிக்குள்ளபிள்ளைகளும்*
போவான்போகின்றாரைப் போகாமல்காத்து* உன்னைக்
கூவுவான்வந்துநின்றோம்* கோதுகலமுடைய
பாவாய் ! எழுந்திராய் பாடிப்பறைகொண்டு*
மாவாய்பிளந்தானை மல்லரைமாட்டிய*
தேவாதிதேவனைச் சென்றுநாம் சேவித்தால்*
ஆவாவென்றாராய்ந் தருளேலோரெம்பாவாய்.

9. தூமணிமாடத்துச் சுற்றும்விளக்கெரிய*
தூபம்கமழத் துயிலணைமேல்கண்வளரும்*
மாமான்மகளே! மணிக்கதவம்தாள்திறவாய்*
மாமீர்! அவளையெழுப்பீரோ ?* உன் மகள் தான்
ஊமையோ ? அன்றிச் செவிடோ ? அனந்தலோ ?*
ஏமப்பெருந்துயில் மந்திரப்பட்டாளோ ?*
மாமாயன்மாதவன் வைகுந்தனென்றென்று*
நாமம்பலவும் நவின்றேலோரெம்பாவாய்.

10. நோற்றுச்சுவர்க்கம் புகுகின்றஅம்மனாய்!*
மாற்றமும்தாராரோ ? வாசல்திறவாதார்*
நாற்றத்துழாய்முடி நாராயணன்* நம்மால்
போற்றப்பறைதரும் புண்ணியனால்* பண்டுஒருநாள்
கூற்றத்தின்வாய்வீழ்ந்த கும்பகரணனும்*
தோற்றும் உனக்கே பெருந்துயில்தான் தந்தானோ!*
ஆற்றஅனந்தலுடையாய் ! அருங்கலமே !
தேற்றமாய்வந்து திறவேலோரெம்பாவாய்.

11. கற்றுக்கறவைக் கணங்கள்பலகறந்து*
செற்றார்திறலழியச் சென்றுசெருச்செய்யும்*
குற்றமொன்றில்லாத கோவலர்தம்பொற்கொடியே.
புற்றரவல்குல் புனமயிலே! போதராய்*
சுற்றத்துத்தோழிமா ரெல்லாரும்வந்து* நின்
முற்றம்புகுந்து முகில்வண்ணன்பேர்பாட*
சிற்றாதேபேசாதே செல்வப்பெண்டாட்டி!* நீ
எற்றுக்கு உறங்கும் பொருளேலோரெம்பாவாய்.

12. கனைத்திளங்கற்றெருமை கன்றுக்கிரங்கி*
நினைத்துமுலைவழியேநின்றுபால்சோர*
நனைத்தில்லம்சேறாக்கும் நற்செல்வன்தங்காய்!*
பனித்தலைவீழ நின்வாசற்கடைபற்றி*
சினத்தினால்தென்னிலங்கைக் கோமானைச் செற்ற*
மனத்துக்கினியானைப் பாடவும்நீவாய்திறவாய்*
இனித்தானெழுந்திராய் ஈதென்னபேருறக்கம்!*
அனைத்தில்லத்தாரும் அறிந்தேலோரெம்பாவாய்.

13. புள்ளின்வாய்கீண்டானைப் பொல்லாஅரக்கனை*
கிள்ளிக்களைந்தானைக் கீர்த்திமைபாடிப்போய்*
பிள்ளைகளெல்லாரும் பாவைக்களம்புக்கார்*
வெள்ளியெழுந்து வியாழமுறங்கிற்று*
புள்ளும்சிலம்பினகாண் போதரிக்கண்ணினாய் !
குள்ளக்குளிரக் குடைந்துநீராடாதே
பள்ளிக்கிடத்தியோ ? பாவாய்! நீநன்னாளால்*
கள்ளம் தவிர்ந்து கலந்தேலோரெம்பாவாய்.

14. உங்கள் புழைக்கடைத் தோட்டத்துவாவியுள்*
செங்கழுநீர்வாய்நெகிழ்ந்து ஆம்பல்வாய்கூம்பினகாண்*
செங்கல்பொடிக்கூறை வெண்பல்தவத்தவர்*
தங்கள்திருக்கோயில் சங்கிடுவான் போதந்தார்*
எங்களைமுன்னம் எழுப்புவான்வாய்பேசும்*
நங்காய்! எழுந்திராய் நாணாதாய்! நாவுடையாய்!*
சங்கொடுசக்கரம் ஏந்தும்தடக்கையன்*
பங்கயக்கண்ணானைப் பாடேலோரேம்பாவாய்.

15. எல்லே! இளங்கிளியே! இன்னம்உறங்குதியோ!*
சில்லென்றழையேன்மின்! நங்கைமீர்! போதர்கின்றேன்*
வல்லைஉன்கட்டுரைகள் பண்டேஉன்வாயறிதும்*
வல்லீர்கள்நீங்களே நானேதானாயிடுக*
ஒல்லைநீபோதாய் உனக்கென்ன வேறுடையை*
எல்லாரும்போந்தாரோ? போந்தார்போந்தெண்ணிக்கொள்*
வல்லானைகொன்றானை மாற்றாரைமாற்றழிக்க
வல்லானை மாயனைப்பாடேலோரெம்பாபவாய்.

16.✦✦ நாயகனாய்நின்ற நந்தகோபனுடைய
கோயில்காப்பானே!* கொடித்தோன்றும் தோரண
வாயில்காப்பானே!* மணிக்கதவம் தாள்திறவாய்*
ஆயர்சிறுமியரோமுக்கு அறைபறை
மாயன்மணிவண்ணன் நென்னலேவாய்நேர்ந்தான்*
தூயோமாய்வந்தோம் துயிலெழப்பாடுவான்*
வாயால்முன்னம்முன்னம் மாற்றாதேஅம்மா!* நீ
நேயநிலைக்கதவம் நீக்கேலோரெம்பாவாய்.

17. அம்பரமேதண்ணீரே சோறே அறஞ்செய்யும்*
எம்பெருமான்! நந்தகோபாலா! எழுந்திராய்!*
கொம்பனார்க்கெல்லாம் கொழுந்தே! குலவிளக்கே!*
எம்பெருமாட்டி யசோதாய்! அறிவுறாய்*
அம்பரமூடறுத்தோங்கி உலகளந்த*
உம்பர்கோமானே! உறங்காதுஎழுந்திராய்*
செம்பொற்கழலடிச்செல்வா! பலதேவா!*
உம்பியும்நீயும் உறங்கேலோரெம்பாவாய்.

18.✦✦ உந்துமதகளிற்றன் ஓடாததோள்வலியன்*
நந்தகோபாலன்மருமகளே! நப்பின்னாய்!*
கந்தம்கமழும்குழலி! கடைதிறவாய்*
வந்துஎங்கும் கோழிஅழைத்தனகாண்* மாதவிப்
பந்தல்மேல் பல்கால்குயிலினங்கள்கூவினகாண்*
பந்தார்விரலி! உன்மைத்துனன்பேர்பாட*
செந்தாமரைக்கையால் சீரார்வளையொலிப்ப*
வந்துதிறவாய் மகிழ்ந்தேலோரெம்பாவாய்.

19. குத்துவிளக்கெரியக் கோட்டுக்கால்கட்டில்மேல்*
மெத்தென்ற பஞ்சசயனத்தின்மேலேறி*
கொத்தலர்பூங்குழல் நப்பின்னைகொங்கைமேல்*
வைத்துக்கிடந்த மலர்மார்பா! வாய்திறவாய்*
மைத்தடங்கண்ணினாய்! நீஉன்மணாளனை*
எத்தனைபோதும் துயிலெழவொட்டாய்காண்*
எத்தனையேலும்பிரிவாற்றகில்லாயால்*
தத்துவமன்று தகவேலோரெம்பாவாய்.

20. முப்பத்துமூவர் அமரர்க்குமுன்சென்று*
கப்பம்தவிர்க்கும்கலியே! துயிலெழாய்*
செப்பமுடையாய்! திறலுடையாய்!* செற்றார்க்கு
வெப்பம்கொடுக்கும் விமலா! துயிலெழாய்*
செப்பன்னமென்முலைச் செவ்வாய்ச்சிறுமருங்குல்*
நப்பின்னைநங்காய்! திருவே! துயிலெழாய்*
உக்கமும்தட்டொளியும் தந்துஉன்மணாளனை*
இப்போதே எம்மைநீராட்டேலோரெம்பாவாய்.

21. ஏற்றகலங்கள் எதிர்பொங்கிமீதளிப்ப*
மாற்றாதேபால்சொரியும் வள்ளல்பெரும்பசுக்கள்*
ஆற்றப்படைத்தான்மகனே! அறிவுறாய்*
ஊற்றமுடையாய்! பெரியாய்! உலகினில்*
தோற்றமாய்நின்ற சுடரே! துயிலெழாய்*
மாற்றார்உனக்கு வலிதொலைந்துஉன்வாசற்கண்*
ஆற்றாதுவந்து உன்னடிபணியுமாபோலே*
போற்றியாம்வந்தோம் புகழ்ந்தேலோரெம்பாவாய்.

22. அங்கண்மாஞாலத்தரசர்* அபிமான
பங்கமாய்வந்து நின்பள்ளிக்கட்டிற்கீழே*
சங்கமிருப்பார்போல் வந்துதலைப்பெய்தோம்*
கிங்கிணிவாய்ச்செய்த தாமரைப் பூப்போலே*
செங்கண்கிறுச்சிறிதே எம்மேல்விழியாவோ ?
திங்களும்ஆதித்தியனும் எழுந்தாற்போல்*
அங்கணிரண்டும்கொண்டு எங்கள்மேல்நோக்குதியேல்*
எங்கள்மேல்சாபம் இழிந்தேலோரெம்பாவாய்.

23.✦✦ மாரிமலைமுழைஞ்சில் மன்னிக்கிடந்துறங்கும்*
சீரியசிங்கம் அறிவுற்றுத்தீவிழித்து*
வேரிமயிர்பொங்க எப்பாடும்பேர்ந்துதறி*
மூரிநிமிர்ந்து முழங்கிப்புறப்பட்டு*
போதருமாபோலே நீ பூவைப்பூவண்ணா !* உன்
கோயில் நின்று இங்ஙனே போந்தருளி* கோப்புடைய
சீரியசிங்காசனத்துஇருந்து* யாம்வந்த
காரியம் ஆராய்ந்தருளேலோரெம்பாவாய்.

24.✦✦ அன்றுஇவ்வுலகம்அளந்தாய் ! அடிபோற்றி*
சென்றங்குத்தென்னிலங்கைசெற்றாய் ! திறல்போற்றி*
பொன்றச்சகடம்உதைத்தாய் ! புகழ்போற்றி*
கன்றுகுணிலாஎறிந்தாய் ! கழல்போற்றி*
குன்றுகுடையாஎடுத்தாய் ! குணம்போற்றி*
வென்றுபகைகெடுக்கும் நின்கையில்வேல்போற்றி*
என்றென்றுஉன்சேவகமே ஏத்திப்பறைகொள்வான்*
இன்றுயாம்வந்தோம் இரங்கேலோரெம்பாவாய்.

25. ஒருத்திமகனாய்ப்பிறந்து* ஓரிரவில்
ஒருத்திமகனாய் ஒளித்துவளர*
தரிக்கிலானாகித் தான்தீங்குநினைந்த*
கருத்தைப்பிழைப்பித்துக் கஞ்சன்வயிற்றில்*
நெருப்பென்னநின்ற நெடுமாலே !* உன்னை
அருத்தித்துவந்தோம் பறைதருதியாகில்*
திருத்தக்கசெல்வமும் சேவகமும்யாம்பாடி*
வருத்தமும்தீர்ந்து மகிழ்ந்தேலோரெம்பாவாய்.

26. மாலே! மணிவண்ணா! மார்கழிநீராடுவான்*
மேலையார் செய்வனகள் வேண்டுவனகேட்டியேல்*
ஞாலத்தையெல்லாம் நடுங்கமுரல்வன*
பாலன்னவண்ணத்து உன்பாஞ்சசன்னியமே*
போல்வனசங்கங்கள் போய்ப்பாடுடையனவே*
சாலப்பெரும்பறையே பல்லாண்டிசைப்பாரே*
கோலவிளக்கே கொடியேவிதானமே*
ஆலினிலையாய் ! அருளேலோரெம்பாவாய்.

27.✦✦ கூடாரைவெல்லும்சீர்க் கோவிந்தா!* உன்தன்னைப்
பாடிப்பறைகொண்டு யாம்பெறுசம்மானம்*
நாடுபுகழும் பரிசினால்நன்றாக*
சூடகமேதோள்வளையே தோடேசெவிப்பூவே*
பாடகமேயென்றனைய பல்கலனும்யாமணிவோம்*
ஆடையுடுப்போம் அதன்பின்னேபாற்சோறு*
மூடநெய்பெய்து முழங்கைவழிவார*
கூடியிருந்து குளிர்ந்தேலோரெம்பாவாய்.

28.✦✦ கறவைகள்பின்சென்று கானம்சேர்ந்துண்போம்*
அறிவொன்றுமில்லாத ஆய்க்குலத்து* உன்தன்னைப்
பிறவிபெறுந்தனை புண்ணியம்யாமுடையோம்*
குறைவொன்றுமில்லாத கோவிந்தா! உன்தன்னோடு
உறவேல்நமக்கு இங்குஒழிக்கஒழியாது*
அறியாதபிள்ளைகளோம் அன்பினால்* உன்தன்னை
சிறுபேரழைத்தனவும் சீறியருளாதே*
இறைவா! நீதாராய் பறையேலோரெம்பாவாய்.

29.✦✦ சிற்றஞ் சிறுகாலே வந்துஉன்னைச்சேவித்து* உன்
பொற்றாமரையடியே போற்றும்பொருள்கேளாய்*
பெற்றம்மேய்த்துண்ணும் குலத்தில் பிறந்து* நீ
குற்றவேல்எங்களைக் கொள்ளாமல்போகாது*
இற்றைப்பறைகொள்வா னன்றுகாண்கோவிந்தா!*
எற்றைக்கும் ஏழேழ்பிறவிக்கும்* உன்தன்னோடு
உற்றோமேயாவோம் உனக்கேநாம் ஆட்செய்வோம்*
மற்றைநம்காமங்கள் மாற்றேலோரெம்பாவாய்.

30.✦✦ வங்கக்கடல்கடைந்த மாதவனைக்கேசவனை*
திங்கள்திருமுகத்துச் சேயிழையார்சென்றிறைஞ்சி*
அங்கப்பறைகொண்டவாற்றை* அணிபுதுவைப்
பைங்கமலத்தண்தெரியல் பட்டர்பிரான்கோதைசொன்ன*
சங்கத்தமிழ்மாலை முப்பதும்தப்பாமே*
இங்குஇப்பரிசுரைப்பார் ஈரிரண்டுமால்வரைத்தோள்*
செங்கண்திருமுகத்துச் செல்வத்திருமாலால்*
எங்கும்திருவருள்பெற்று இன்புறுவரெம்பாவாய்.

ஆண்டாள் திருவடிகளே சரணம்

✦✦ *இருமுறை சேவிக்க வேண்டிய பாசுரங்கள்*

Sri

# DIVYA PRABHANDA ACADEMY

## (A Unit of SNIF)

Institute of Continuing Education in Sri Vaishnava Texts